உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பட்டணத்துப்பிள்ளையார்

திருவாய்மலர்ந்தருளிய

## பிரபந்ததிரட்டும்.

## ஷையார் புராணமும்.

—:o:—

ஸ்ரீமது
ஞானராஜதானியான
பொம்மையபாளையம்
பெரியமடம் சிவகஞ்சி மயூரா
சலநிவாச எதிராஸ்வர
கர்த்தரான

**சிவஞானபாலையசுவாமிகள்**

கட்டளையின்படி.

---

இயற்றமிழாசிரியராகிய

**திரு-விசாகப்பெருமாளையரவர்கள்**

முன்னிலையில்

**வே - குமாரசாமிஐயரால்**

பரிசோதித்து

**வ - அண்ணாமலைபிள்ளையவர்களால்**

வர்த்தமானதரங்கிணி சாகை அச்சுக்கூடத்திற்
பதிப்பித்து
பட்டத்துடன்
வெளியிடப் பட்டன.

---

விபவவருஷம் சித்திரைமீ.

சிவமயம்.

# பட்டணத்துப் பிள்ளையார்
## திருவாய் மலர்ந்தருளிய
## பி ர ப ந் த ங் க ள்.

——:o:——

க—கோயில்நான்மணிமாலை.
௨—திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.
௩—திருக்கழுமல மும்மணிக்கோவை.
௪—திருவொற்றியூர் திருக்குறுந்தொகை.
௫—திருவேகம்பமுடையார் திருவந்தாதி.
௬—திருப்பாடற்றிரட்டு.
௭—புலம்பல்.

ஆக - ௭.

## பிரசித்தபத்திரிகை.

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னபட்டணம் தங்கசாலைத் தெருவில் சுமைதாங்கிக்கடுத்த- க - வது கதவிலக்கமுள்ளவீட்டில் ஸ்தாபிக்கப்பட்டஇலக்கியவிலக்கண புத்தகசாலைத்தலைவர்களாகிய வே-குமாரசாமி ஐயரிடத்திலும், வ - அண்ணாமலைபிள்ளையவர்களிடத்திலும், வாங்கிக்கொள்ளலாம்.

பட்டணத்துப்பிள்ளையார் புராணம்.

உ

கணபதிதுணை.

# கையொப்பக்காரர்கள்பெயர்.

———:o:———

ஸ்ரீகைலாசபரம்பரை திருவாவடுதுறை ஆதீனம் சின்னபண்டாரச் சந்நிதிகளாயெழுந்தருளியிருக்கின்ற புத்தகம்
சுப்பிரமணியதேசிகசுவாமிகள் ... ... ... ... ... ௧0
பா. வேலுமுதலியார் ... ... ... ... ... ... உ
ம. செந்தில்வேலுமுதலியார் ... ... ... ... ... க
சி. அழகப்பமுதலியார் ... ... ... ... ... ... க
பூ. விசுவநாதமுதலியார் ... ... ... ... ... ... க
ந. வீராசாமிமுதலியார் ... ... ... ... ... ... க
ந. நீலகண்டமுதலியார் ... ... ... ... ... ... க
ப. சண்முகமுதலியார் ... ... ... ... ... ... க
ந. திருவேங்கடமுதலியார் ... ... ... ... ... க
தி. இரத்தினமுதலியார் ... ... ... ... ... ... க
ந. நமசிவாயமுதலியார் ... ... ... ... ... ... க
சண்முகமுதலியார் ... ... ... ... ... ... க
ச. சீனிவாசலுநாயகர் ... ... ... ... ... ... உ
பு. சுந்தரராமாநுஜநாயகர் ... ... ... ... ... க
இ. பாலசுந்தரமுதலியார் ... ... ... ... ... க
வ. குமாரசாமிமுதலியார் ... ... ... ... ... ... க
சை. இரத்தினசெட்டியார் ... ... ... ... ... க
தி. ஆ. நாகப்பமுதலியார் ... ... ... ... ... ... க
ம. அரங்கசாமிமுதலியார் ... ... ... ... ... க
தி. சோமசுந்தரசெட்டியார் ... ... ... ... ... க
ம. தணிகாசலமுதலியார் ... ... ... ... ... க
ம. கந்தசாமிசெட்டியார் ... ... ... ... ... ... க
தி. ஆதிநாராயணப்பிள்ளை ... ... ... ... ... க
முத்துச்சாமிமுதலியார் ... ... ... ... ... ... ரு
இரத்தினமுதலியார் ... ... ... ... ... க
பொ. முனிசாமிஉபாத்தியாயர் ... ... ... ... ... க
வ. சுப்பிரமணியப்பிள்ளை ... ... ... ... ... ... க

பு. முனிசாமி ... ... ... ... ... ... ... க
கு. சருக்கனை ... ... ... ... ... ... ... ... க
அருணசலப்பிள்ளை ... ... ... ... ... ...
சண்முகஉபாத்தியாயர் ... ... ... ... ... ... ரு
சிவகுருமுதலியார் ... ... ... ... ... ... ரு
அருணசலமுதலியார் ... ... ... ... ... ... க
பு. வேலாயுதமுதலியார் ... ... ... ... ... ரு
கோ. வி. சாமிநாதப்பிள்ளை ... ... ... ... ... ... க
தி. சண்முகப்பிள்ளை ... ... ... ... ... ... ... க
சி. தருமலிங்கப்பிள்ளை ... ... ... ... ... ... ... க
வே. சஞ்சீவிராயச்செட்டியார் ... ... ... ... ... க
ஆ. இராஜரத்தினம் ... ... ... ... ... ... ... ... க
தி. முருகப்பிள்ளை ... ... ... ... ... ... ... ... க
தி. சேஷாசலப்பிள்ளை ... ... ... ... ... ... ... க
க. முனிசாமிசெட்டியார் ... ... ... ... ... ... க
வே. கங்காதரசெட்டியார் ... ... ... ... ... ... க
ம. வேங்கடாசலசெட்டியார் ... ... ... ... ... உ
பெ. கா. வரதராஜமுதலியார் ... ... ... ... ... ங
பெ. தி. கிருஷ்ணசாமிமுதலியார் ... ... ... ... க
பெ. வே. சு. தாண்டவராயமுதலியார் ... ... ... ... க
தி. ஐ. ஏகாம்பரம்பிள்ளை ... ... ... ... ... ... ... க
பெ. தெய்வசிகாமணி ... ... ... ... ... ... ... ... க
க. ம. ஆறுமுகப்பிள்ளை ... ... ... ... ... ... ... க
சா. தில்லைகோவிந்தமுதலியார் ... ... ... ... ... ... க
தி. கோவிந்தராஜுமுதலியார் ... ... ... ... ... ... உ
பெ. தருமராயமுதலியார் ... ... ... ... ... ... க
சி. வேங்கடாசலமுதலியார் ... ... ... ... ... ... க
அ. சுப்பராயச்செட்டியார் ... ... ... ... ... ... க
ஆ. சோமசுந்தரமுதலியார் ... ... ... ... ... ... க
தி. சுப்பராயச்செட்டியார் ... ... ... ... ... ... க
உ. சிதம்பரம்பிள்ளை ... ... ... ... ... ... ... உ

த. கோ. இராமகிருஷ்ணபிள்ளை ... ... ... ... ... க௨
த. ப. அண்ணுசாமிபிள்ளை ... ... ... ... ... கா
த. ஆ. வையாபுரிபிள்ளை ... ... ... ... ... ... கா
இ. தே. இரத்தினவேலுமுதலியார் ... ... ... ... க
கு. சண்முகமுதலியார் ... ... ... ... ... ... உ
ம. கு. கிருஷ்ணசாமிப்பிள்ளை ... ... ... ... ... க
தி. வேங்கடாசலசெட்டியார் ...... ... ... ... ... க
பு. தாண்டவராய-அப்பாசாமி ........ ... ... ... க
ம. பெ. விநாயகம்பிள்ளை ... ... ... ... ... ... க
தி. க. ரா. சிவசிதம்பரமுதலியார் ... ... ... ... க
தி. உ. சுப்பிரமணியன் ... ... ... ... ... ... ... க
தி. பரமானந்தம்பிள்ளை ... ... ... ... ... ... க
தி. அப்பாசாமி ... ... ... ... ... ... ... ... க
தி. குலநம்பிகிருஷ்ணசாமிஐயன் ... ... ... ... க
தி. நாகப்பசெட்டி ... ... ... ... ... ... ... க
தி. இராமசாமிசெட்டி ... ... ... ... ... ... க
க. வா. இராசப்பமுதலியார்... ... ... ... ... ... க
[illegible]. லா. குப்புச்செட்டியார்... ... ... ... ... ... க
[illegible]யித்தியலிங்கம்பிள்ளை ... ... ... ... ... ... க
[illegible]ரு. இரங்கசாமிப்பிள்ளை ... ... ... ... ... க
த. குருமூர்த்திசெட்டி... ... ... ... ... ... ... க
தி. கிரா. மு. சீனிவாசப்பிள்ளை... ... ... ... ... உ
கி. வேலுபிள்ளை ... ... ... ... ... ... ... க
க. ஏகாம்பரமுதலியார் ... ... ... ... ... ... க
தி. நெ. சுந்தரமுதலியார் ... ... ... ... ... ... க
செ. வீராசாமிப்பிள்ளை ... ... ... ... ... ... க
நெ. குருநாதசெட்டியார் ... ... ... ... ... ... க
ஜ. இரத்தினசபாபதிசெட்டி ... ... ... ... ... க
பா. அருணகிரிமுதலியார் ... ... ... ... ... ... க
தி. பொன்னப்பப்பிள்ளை ... ... ... ... ... ... க
பே. கொ. குழந்தைவேலுமுதலியார் ... ... ... ... க
பு. முருகேசப்பிள்ளை ... ... ... ... ... ... க

| | |
|---|---|
| பு. முனிசாமி ... ... ... ... ... ... ... | க |
| கு. சருக்கரை ... ... ... ... ... ... ... ... | க |
| அருணாசலப்பிள்ளை ... ... ... ... ... ... | |
| சண்முகஉபாத்தியாயர் ... ... ... ... ... ... | ரு |
| சிவகுருமுதலியார் ... ... ... ... ... ... | ரு |
| அருணாசலமுதலியார் ... ... ... ... ... ... | க |
| பு. வேலாயுதமுதலியார் ... ... ... ... ... | ரு |
| கோ. வி. சாமிநாதப்பிள்ளை ... ... ... ... ... ... | க |
| தி. சண்முகப்பிள்ளை... ... ... ... ... ... ... | க |
| சி. தருமலிங்கப்பிள்ளை... ... ... ... ... ... ... | க |
| வே. சஞ்சீவிராயச்செட்டியார்... ... ... ... ... | க |
| அ. இராஜரத்தினம் ... ... ... ... ... ... ... | க |
| தி. முருகப்பிள்ளை ... ... ... ... ... ... ... | க |
| தி. சேஷாசலப்பிள்ளை... ... ... ... ... ... ... | க |
| க. முனிசாமிசெட்டியார்... ... ... ... ... ... | க |
| வே. கங்காதரசெட்டியார் ... ... ... ... ... ... | க |
| ம. வேங்கடாசலசெட்டியார் ... ... ... ... ... | உ |
| பெ. கா. வரதராஜமுதலியார் ... ... ... ... ... | ௩ |
| பெ. தி. கிருஷ்ணசாமிமுதலியார் ... ... ... ... | க |
| பெ. வே. சு. தாண்டவராயமுதலியார் ... ... ... ... | க |
| தி. ஐ. ஏகாம்பரம்பிள்ளை ... ... ... ... ... ... | க |
| பெ. தெய்வசிகாமணி ... ... ... ... ... ... ... | க |
| க. ம. ஆறுமுகப்பிள்ளை ... ... ... ... ... ... | க |
| சா. தில்லைகோவிந்தமுதலியார் ... ... ... ... ... | க |
| தி. கோவிந்தராஜுமுதலியார் ... ... ... ... ... | உ |
| பெ. தருமராயமுதலியார் ... ... ... ... ... ... | கா |
| சி. வேங்கடாசலமுதலியார் ... ... ... ... ... ... | க |
| அ. சுப்பராயச்செட்டியார் ... ... ... ... ... ... | க |
| ஆ. சோமசுந்தரமுதலியார் ... ... ... ... ... | க |
| தி. சுப்பராயச்செட்டியார் ... ... ... ... ... ... | க |
| உ. சிதம்பரம்பிள்ளை ... ... ... ... ... ... | உ |

த. கோ. இராமகிருஷ்ணபிள்ளை ... ... ... ... ... கஉ
த. ப. அண்ணுசாமிபிள்ளை ... ... ... ... ... கா
த. ஆ. வையாபுரிபிள்ளை ... ... ... ... ... ... கா
இ. தே. இரத்தினவேலுமுதலியார் ... ... ... ... க
கு. சண்முகமுதலியார் ... ... ... ... ... ... உ
ம. கு. கிருஷ்ணசாமிப்பிள்ளை ... ... ... ... ... க
தி. வேங்கடாசலசெட்டியார் ...... ... ... ... ... க
பு. தாண்டவராய-அப்பாசாமி ....... ... ... ... க
ம. பெ. விநாயகம்பிள்ளை ... ... ... ... ... ... க
தி. க. ரா. சிவசிதம்பரமுதலியார் ... ... ... ... க
தி. உ. சுப்பிரமணியன் ... ... ... ... ... ... ... க
தி. பரமானந்தம்பிள்ளை ... ... ... ... ... ... க
தி. அப்பாசாமி ... ... ... ... ... ... ... ... க
தி. குலநம்பிகிருஷ்ணசாமிஐயன் ... ... ... ... க
தி. நாகப்பசெட்டி ... ... ... ... ... ... ... க
தி. இராமசாமிசெட்டி ... ... ... ... ... ... க
க. வா. இராசப்பமுதலியார்... ... ... ... ... ... க
தி. லா. குப்புச்செட்டியார்... ... ... ... ... ... க
தி. வயித்தியலிங்கம்பிள்ளை ... ... ... ... ... ... க
தி. குரு. இரங்கசாமிப்பிள்ளை ... ... ... ... ... க
தி. குருமூர்த்திசெட்டி... ... ... ... ... ... ... க
தி. கிரா. மு. சீனிவாசப்பிள்ளை... ... ... ... ... உ
கி. வேலுபிள்ளை ... ... ... ... ... ... ... க
ச. ஏகாம்பரமுதலியார் ... ... ... ... ... ... க
தி. நெ. சுந்தரமுதலியார் ... ... ... ... ... ... க
செ. வீராசாமிப்பிள்ளை ... ... ... ... ... ... க
நெ. குருநாதரெட்டியார் ... ... ... ... ... ... க
ஜ. இரத்தினசபாபதிசெட்டி ... ... ... ... ... க
பா. அருணகிரிமுதலியார் ... ... ... ... ... ... க
தி. பொன்னப்பபிள்ளை ... ... ... ... ... ... க
பே. கொ. குழந்தைவேலுமுதலியார் ... ... ... ... க
பு. முருகேசப்பிள்ளை ... ... ... ... ... ... க

| | |
|---|---|
| பூ. நாராயணசாமிமுதலியார் ... ... ... ... ... | க |
| கா. சினிவாசஐயர்... ... ... ... ... ... ... | க |
| வே. இராமாநுஜஐயர் ... ... ... ... ... ... | க |
| தி. குமாரசுவாமிஐயர் ... ... ... ... ... | க |
| பு. குமாரவேலுமுதலியார் ... ... ... ... ... ... | க |
| செ. அல்லமாப்பிரபுஐயர்... ... ... ... ... ... | க |
| ஆ. முத்துச்சாமிமுதலியார்... ... ... ... ... ... | க |
| தொ. சதாசிவஐயர்... ... ... ... ... ... ... | க |
| தி. சுப்பராயஐயர் ... ... ... ... ... ... ... | க |
| பா. சம்பந்தமுதலியார் ... ... ... ... ... ... | க |
| தொ. முத்துச்சாமிமுதலியார் ... ... ... ... ... | க |
| செ. சந்தியப்பமுதலியார் ... ... ... ... ... | க |
| சுப்புமுதலியார் ... ... ... ... ... ... ... ... | க |
| ச. இராமசாமிமுதலியார்... ... ... ... ... ... | க௦ |
| வே. தனக்கோடிப்பிள்ளை ... ... ... ... ... ... | க |
| பு. கிருஷ்ணசாமி ... ... ... ... ... ... ... | க |
| மு. வீ. ஜெயராமன்செட்டியார்... ... ... ... ... | க |
| கி. இராசாமிமுதலியார் ... ... ... ... ... ... | க |
| அ. முத்துச்சாமிசெட்டியார் ... ... ... ... ... ... | க |
| உ. வேதாசலமுதலியார் ... ... ... ... ... ... | க |
| சி. பி. சாமிநாதம்பிள்ளை... ... ... ... ... ... ... | க௦ |
| கி. கீ. இராமலிங்கஉபாத்தியாயர் ... ... ... ... | க௦ |
| சா. அப்பாசாமிப்பிள்ளை... ... ... ... ... ... ... | உ |
| வே. நாகப்பிள்ளை ... ... ... ... ... ... ... | ரு |
| வே. காளத்திஉபாத்தியாயர் ... ... ... ... ... | ரு |
| வ. நா. சுந்தரமுதலியார்... ... ... ... ... ... | ரு |
| ஆ. அரங்கசாமிமுதலியார் ... ... ... ... ... ... | உ |
| அரங்கசாமிஉபாத்தியாயர்... ... ... ... ... | க௦ |
| ம. வி. அண்ணுசாமிகிராமணி ... ... ... ... ... | க௦ |
| நா. த. சண்முகப்பிள்ளை ... ... ... ... ... ... | ரு |
| வீரப்பசெட்டியார் ... ... ... ... ... ... | ரு |

கோ. மாசிலாமணிமுதலியார் ... ... ... ... ... க
ச. சிங்காரவேலுமுதலியார் ... ... ... ... ... க
பு. உத்தண்டிமுதலியார் ... ... ... ... ... ... க
பொ. சின்னதம்பிமுதலியார் ... ... ... ... ... க
பொ. முனிசாமிமுதலியார் ... ... ... ... ... ... க
ப. நாகப்பமுதலியார் ... ... ... ... ... ... க
தே. முருகேசமுதலியார் ... ... ... ... ... ... க
ம. ஏகாம்பரமுதலியார் ... ... ... ... ... ... க
வே. வீரபத்திரஐயர் ... ... ... ... ... ... ... க
ஆ. கோபாலமுதலியார் ... ... ... ... ... ... க
மே. ஆதிபுரிமுதலியார்... ... ... ... ... ... ... க
பு. இரத்தினவேலுமுதலியார் ... ... ... ... ... க
பெ. குப்புசெட்டியார்... ... ... ... ... ... ... க
செ. இராஜகோபாலுமுதலியார்... ... ... ... ... க
கா. கண்ணுசாமிமுதலியார்... ... ... ... ... ... க
வே. சிற்றம்பலமுதலியார்... ... ... ... ... ... க
சே. பு. முத்துச்சாமிப்பிள்ளை ... ... ... ... ... ... க
சே. செ. முனிசாமிமுதலியார் ... ... ... ... ... உ
சே. வை. மீனுக்ஷிசுந்தரம்பிள்ளை ... ... ... ... ... க
சே. தி. சுப்பராயப்பிள்ளை... ... ... ... ... ... க
வை. கோதண்டராமமுதலியார் ... ... ... ... ... க
பெ. சுப்பிரமணியப்பிள்ளை ... ... ... ... ... ...
தி. ஐயாசாமிமுதலியார் ... ... ... ... ... ... க
தி. கிருஷ்ணசாமிமுதலியார் ... ... ... ... ...
சா. சுப்பராயச்செட்டியார்... ... ... ... ... ... க
ரெ. வீராசாமிப்பிள்ளை ... ... ... ... ... ... க
வ. தேவராஜபிள்ளை ... ... ... ... ... ... ... க
பி. சிங்காரவேலுசெட்டியார் ... ... ... ... ... க

சிவமயம்.

கணபதி துணை.

திருவெண்காடனென்னும்

# பட்டணத்துப்பிள்ளையார்

# புராணம்.

பாயிரம்.

வழிபடுகடவுள்வணக்கம்.

ஒளிமேவுந் தில்லைவனத் தோங்கியகற்ப கவனமொன்றண்டு கண்டாற், றெளிமேவு மானந்த நிருத்தமிடு நினைந்தபடிச் செல்வஞ்சேர்க்குங், களிமேவுந் தும்பிமுகங் கனிகாட்டும் விண்ணுறை கற்பகமும்போலு, மளிமேவும் பட்டினத்துப் பிள்ளைபுரா ணம்பகர்தற்களிக்குமன்றே. (௧)

மருமகற்கு வழக்கிசைத்து வளையல்விற்று மாணிக்கவணிகராகிக், குருமணிசூழ் நான்மாடக் கூடல் வருமொருவர்மன்றுட் குனிக்குங்கூத்தர், பொருண்மகனும்வணிகவுருத் திரசன்மர்பிதா வருளும் பொருள்வளர்த்தா, ரிருபதமாம் பொருள்செறித்தெம் மகத்தினினி திருப்பரா மென்றனுன்றும். (௨)

சபாநாதர்துதி.

பரஞ்சோதி தருபான்மைப் பதிஞானப்பொதுவகற்றும்
வரஞ்சேருமமரர்குழாம் வளைந்துள பொன்னம்பலத்தம்
புரஞ்சேருஞ் செழுங்கடக புரியரசனம்பலத்து
மூரஞ்சேரு நடமூன்று முடையபிரா னடிபணிவாம். (௧)

சிவகாமசுந்தரியம்மைதுதி.

உலகமெலா மீன்றருளி யொருமலைக்குமகளாகி
யிலகுமயிலிளையோற்கு மிபமுகற்கும் பாலூட்டு
முலையினைய கன்னிகையாய் முகிழ்த்தபெருங்கருணையளாந்
தொலைவில் புகழ்ச்சிவகாம சுந்தரிசெந்தாள் பணிவாம். (௨)

விநாயகர்துதி.

இருநான்கு மதம்பொழியு மிருள்வேழமிரிந்தோடத்
திருஞான மதமூன்றுஞ் சிவவேத மகிழ்களிறு

பெருநாத முடிநடிக்கும் பெரியோன்ற னுடனாடிக்
கருஞானமலைதொலைக்குங் கற்பகப்பொற்பதம்பணிவாம். (௩)

## சுப்பிரமணியசுவாமி துதி.

அருட்சிவனு ரருண்மலைக்கும் பலமலைக்குமதிபதியாய்
மருட்படவாருயிருண்ணும்வரைவயிறுகிழித்தொழித்துத்
தெருட்புலவர் சிறைமீட்டச் சேவகனெஞ்சிறையாய
விருட்படலம்படச்சோதி யெறிக்குமவனடி பணிவாம். (௪)

## திருநந்திதேவர் துதி.

மருணூல் சொல்லொருகோடி மறுசமயக்கொடும்பேய்கள்
பொருணூல் சொல் பவர்போல்வார் பொய்யாக முடிவித்துத்
தெருணூல் சொல் பரம்பரையாஞ் சிவமுதலென் றன்றயாடி
யருணூல்சொல் லருணந்தி யருளாலிங் கருள் பெறுவாம். (௫)

## திருஞானசம்பந்தசுவாமிகள் துதி.

மணிவாயாற்றிருமிடற்றல் மலர்க்கரத்தாற்றமிழ்மூன்று
மணியாக்கிப்புனலூடு மருந்தமிழ்நாடெனத்தோன்றுந்
தணியாத திருஞானசம்பந்தர் பதம்பணியும்
பணிவார்தம்பதம்பணியும் பணியெமக்குப்பணியாமே. (௬)

## திருநாவுக்கரசுசுவாமிகள் துதி.

கல்லோடம் வெள்விடஞ்சூழ் காசினியினடக்குமலை
யெல்லாமிங்கிறும்பூதா வின்பமெனவிளையாடிச்
சொல்லாடிச் சிவகதியைத் துதித்துமதித்துக்கதித்தார்
பல்லாரும்புகழ்நாவுக் கரசர்பதமலர்பணிவாம். (௭)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

முதல்வனார்பாவையிட முன்னுகர்வானளித்*தருளி
யிதமுதலாம்பரவையமுதினிமை தரத்தானுகர்வான்
றதிகுலாங்குபேரனையுந் தோழனெனவுடையாரை
மதனுருத்துதேவும்வன்றொண்டர்பதம்பணிவாம். (௮)

---

* இஃது செய்தெனெச்சமாயினும் செயவெனெச்சப்பொருள் த ரல்காண்க.

## மாணிக்கவாசகசுவாமிகள் துதி.

நானூற்றுமணிக்கோவை நடம்பயிலெம்பெருமாற்குத்
தேனூற்றும்பொன்னிதழித் தெரியலுமேம்படச்சாத்தி
வானூற்றமுதவுதிரு வாசகம்பேசினர்பாத
மானூற்றுவிலையாக வணங்குதும்யாம் வணக்குதுமே. (௯)

## தில்லைவாழந்தணர் துதி.

சிரசபா நடம்பயிலுந் திருவாரூரொருநாத
ஞருறையா னந்த நட நாதனைநேராதலினு
லாரணராந்தில்லைவாழந்தணரென்றெடுத்தோதும்
பேருடையவேதாந்தப் பெரியோர்தம்பதம்பணிவாம். (௰)

## சந்தானதேசிகர் துதி.

*கண்ணிய மாயாபோதக்கடங்கடத்திக்கணிவித்துத்
தண்ணளியாலிருளறுத்துத் தன்னையென்னைத்தந்தனறுல்
வெண்ணெய்நல்லூர்மெய்கண்டான்மென்மலர்த்தாண்முடிசூட்டி
யண்ணலந் தேசிகர் மலர்த்தாளங்கங்கே பணிந்தெழுவாம். (௰௧)

## காரைக்காலம்மைதுதி.

வீயாதமாயவுடல் வெறுப்பினுலோவிமல
ரோயாது பேயுடனுட்டுவந்ததனுலோவிங்குச்
சேயாயவெள்ளிமலைச்சேர்வதற்கோதெரியாது
பேயானள்காரைக்காற் பெண்ணணங்கன்னவட்பணிவாம். (௰௨)

## இயற்பகைநாயனர் துதி.

வினைமாளவரும் விமலர்வேதியராந் தூர்த்தற்கு
மனையாளைக்கொடுத்தவர்தாம் வருநெறியிற்றடைநோக்கி
முனைவாளாற்சுற்றமெலா முற்றுவித்தசேவகனு
ரெனையாளுஞ் செட்டிமையாரியற் பகையாம்பணியுறவே. (௰௩)

---

* கண்ணியனவாகிய வெனவிக்குறிப்புமுற்றுப்பெயரெச்சப்பொருள் - தருகின்றது.

## மூர்த்திநாயனார் துதி.

அலையாழிவிடமருந்து மாலவாயமுதருக்கு
மலையாரங்கிடையாமன் மறுத்தனர்விற்றிடுவோருஞ்
சிலையாரக்கரந்தேய்த்துத்திருவருளாற் கரம்வளர்ந்து
தொலையாதசெல்வமுறுந் தொண்டரடிமுடிமுடிப்பாம். (௰௩)

## அமர்நீதிநாயனார் துதி.

மறைதருகோவணமொன்றுமனையாட்டி தனையர்செல்வ
முறைபொருடாமுடனேறி முக்கணனார்மிக்கருளால்
நிறைதருமக்கட்டளையே நீண்டவிமா னமதாக
விறைபுரத்துப்போந்திருந்தாரிணையடித்தாமரைபணிவாம். (௰௪)

## கலிக்கம்பநாயனார் துதி.

ஐம்மேவுமுடியார்முன்ன ரனடியராகிவர
மெய்ம்மேவுந்திருவடிகள் விளங்குவான்விளக்குதலு
மொய்ம்மேவும்புனல்வாராமொய்குழலார்கைதடிந்த
கைம்மேவுங்கலிக்கம்பர் கையிணைகையாற்றொழுவாம். (௰௫)

வேறு.

## பட்டணத்துப்பிள்ளையார் துதி.

அறிவரியதொருபொருணீ யொன்றினுந்தோன்றுயென்றுமட்ங்காயென்று, முறுதியுறச்செய்யுள் செய்தாராதலின்றொலாதியந்தமொன்றிலானைச், சிறியபொதுவினில் மறுவொன்றின்றி விளங்கினையென்றுஞ் செப்பியிப்பால், முறையினிதுவதிசயமேவிளைக்கும் வினையாதுமென மொழிந்தாரன்றே. (௰௬)

மொழிந்தபடிநாற்கோடியாறெண் ணாயிரமேனு முடிவின்மாயை, பொழிந்தபலதத்துவங்களிருட்படலங் கிடப்படுமென்புந்தியுள்ளே, தழைந்திடுநின்சடைமௌலிக்கங்கைகாங்கைசிலம்பலம்புந்தடந்தாளோடும், நுழைந்தனையென் றதிசயித்தாரவரையென் சிந் தையிற்பாட்டி னுழைவித்தேனே. (௰௭)

## அவையடக்கம்.

ஆனந்தையெனுங்கணிகையணியவணிமணிக்கடகமளித்தநாதன், பூநந்துஞ் சடைக்கரந்தவணிக வுருவிலிங்கவுருப்பொருந்துமாயோ,லீனந்தமருதனுகாவெண்காடர்வணிகவுருவிலிங்கமானு,ரியானந்தப்பெரியோர்தம் புகழ்புகழவென்புன்சொலின்சொலாமே.

வாதனையோரிரண்டு மறமன்னுதவ முன்னிழைத்தார்மறங்கணீங்கிப், பேதமைதீர்பட்டினத்துப்பிள்ளையெனு மொருபெரியோர் பிறங்குஞானக், காதையினைப்பெரியோருஞ் சொலக்கேட்டிங்கிசைக்கின்றேன் கடன்ஞாலத்து, ளேதமிலான்றொழிலைந்து மாருயிர்கள் புரிவார்களென்றல்போலும். (உ0)

வெங்கதிராயிரம்பரப்புமாதவனுமளக்கருஞ் சூழ்வியன்ஞாலத்துச், சங்கரன்றனடியாரைப் புகழ்ந்திடல் பூசனைபுரிதல்தருக்கவாற்றிற், பொங்குநலம்பெறுவரெனவாரணவாகமம்புகன்றபொற்பினுலும், பங்கமுறு வெண்காடர்சரிதமடியேனிசைந்து பகர்ந்தவாறே. (உக)

இன்னுமொருவகையுவகை வெண்காடர்குலவணிகரின்புகூற, மன்னியநல்லறிஞர் சிலர்பரந்தகதையிதைத் தொடுத்துவகுத்துக்காட்டு, மென்னவெழிற்புலியூரிலிருங்கலைஞரறியு நெறியிசைத்துளன்யான், பொன்னவையி னிருத்தமிடுமொருத்தனெடும்புகழாகப்புகலலாலே. (உஉ)

புலிமுனியும்பதஞ்சலியுமுதலானபெரியோர்தம்புகழ் புராணமிலகியவாமவர்க்குமுனங்கதியடைந்தோரலவிலவரியற்புராணம்பலபலவாமவைபோலவருவனவுமவ்வண்ணம்பகரலாகும், கலைவடநூல் சொல்லிலென் சொல்லாவிடிலென் கதிக்கதைகள் கழறலாமே. (உ௩)

மகவான்பட்டினம்படைத்தவண்மை திருவெண்காடர்வாழ்ந்தவாய்மை, யகலாமலிடைமருதனுங்கவர்பாற் சிறுவனெனவடைந்தநேயர், இகழ்ஞானவுபதேசம்வைத்தவழி திருவிசைப்பாச்செப்புஞ்செப்பம், புகழோங்கு மொற்றியூ ருற்றிலிங்க மானதுவும் புகலுற்றேன். (உ௪)

பாயிரமுற்றிற்று.

ஆக - திருவிருத்தம். உ௪.



## பூம்புகார்ச்சருக்கம்.

செங்கரங்கால்விழிவதனந் திருநாபியெண்கமலஞ் சேர்ந்தா
னேனு, மெங்கடிருமாலிதயகோகனகங் கோயில்கொண்டங்கிருக்
கும்பொன்மான், பங்கயம்போனீங்காமலிருக்கின்றகாவிரிப்பூம்ப
ட்டினத்துப் புங்கமொரு சற்றுரைக்கே னுருத்திதங்கொண் டரு
மொருமாப்புகன்றுளாரே. (௧)

பொன்னுலகம்புரந்திருக்கும் புரந்தரன்வாழ்பரிமேதம்புரிந்
தகோமா, னன்னைபெரும் பூவுலகிலருஞ்சாயாவனஞ் சேருமமுத
நாதன், றன்னையருச்சனைபுரியத்தினந்தொறும்போய் மீண்டுவரு
ந்தன்மைதீர்ப்பா, னுன்னிநெடுஞ்செங்கோட்டு வெள்ளிமலைப்பிட
ரேறியுவந்தான்மன்றோ. (௨)

வந்துசிவக்குறிசெறியுமிட முதலாச் சேடமுடிமட்டுந்தொட்
டா, னந்தமுடிமணிச்சாயை யெவ்வயினு மெறிப்பவெறிந்தலைதா
ற்றுமற், சந்ததமுந் தாழைமணங்கமழ்சோலை வளநாடுதழுவுங்
கோயிற், றந்திடவுன்னினன் முன்போலாயிரந்தாமரைபுரையுந்த
டங்கணனே. (௩)

அவ்வேலைமலைவிமலை புறத்தோடிக்கூகூவென்றமலைகாட்டச்,
செவ்வேளின் றிடுமிலிங்க நாயகனன்னவனெடுத்தல் செய்யா
வண்ண, மெய்வாழுங்கருணைசெய்ய முன்போலச் சினகரச்சீர்வி
ளங்கச்செய்தா, னிவ்வேயினிளந்தோளி கூவென்றமென்மொழியா
ளெனும் பேருற்றாள். (௪)

வாசவன்சாயாவனத்துளிறை பூசைநிறைவேற மகிழ்ந்தெஞ்
ஞான்று, நேசமுறவுலகிலுள்ளவணிகரெல்லாங்குடி தழைப்பநெ
டி தழைத்தான், காசினிசூழ்சோணாட்டிற்காவிரிப்பூம் பட்டினப்
பேர்கண்டான்மண்டுந், தேசுதருநாற்பத்தெண்ணாயிரநற்குடி விர
வச் செய்தானன்றே. (௫)

குடிவிரவச்செய்ததனுஞ் சாயாவனத்துக்கொழும்பவளக்குன்
றுக்கென்றும், படிபுகழும்பெரும்பூசையோவாமனடாத்தி விடும்
பண்புமன்றி. யடிகளுறைபல்லவனீச் சரமுதலாமாலயமுமவ்வா
றுகி, நெடிது விளங்கிடும்பொருட்டாமென்பரின்பமுறல் பலவுபிர
ப்பினரே. (௬)

விண்ணவர்கோமானனைப்பாற் குருவிலிங்கசங்கமங்கள் விழைந்துநாளுந், தண்ணமரும்பெரும்பூசை யியற்றிமிகபரமிரண்டுந்தமக்கேயாக, மண்ணுலகிலிந்கர மிழைத்தவன்போன்மலிந்த செல்வமலர்ந்துவாழ்ந்தா, ரெண்ணவரும்வசியதன்மந் தடுமாறுதினிதிருந்தங்கியன்றுளாரே. (எ)

வேறு.

எண்ணியசீரறம்பொருளோ டின்பமூறுவணிகர்குழாங்
கண்ணியவீட்டின்பமுமேற்காண்பாராயினிதமர
வண்ணியபேரறமுதனுன்கடைந்தவராம் வெண்காடர்
புண்ணியனூர்பிறந்தபதிபூம்புகார்ப்பட்டினமே. (அ)

கரிகாலன்பெருவளவன்மகள்கேள்வன்கடல்புக்கான்
திருவேயேவெனவழைத்துத்திரைக்கரத்தாற்றரக்கொண்டாள்
வரைகேழ்வன்கலநோக்கிவருமளவுங்கல்லாநாள்
புரைதீரப்பிறந்தபதி பூம்புகார்ப்பட்டினமே. (கூ)

வன்னிமடப்பளியோடு சான்றுகவரவழைத்தாள்
பன்னியகாவிரிமணல்வாய் பாவையைநன்கேழ்வனொறுங்
கன்னியர்களொடும்போகா டிரைகரையாவகைகாத்தாள்
பொன்னனையார்பிறந்தபதி பூம்புகார்ப்பட்டினமே. (ய)

கூவலிற்போய்மாற்றுள் குழவிவிழத்தன்குழவி
யாவலின்வீழ்த்தேற்றெடுத்தாளயல் நோக்கம்வேறென்றால்
மேவினள் குரக்குமுகம் வீடுடையோன்வரவிடுத்தான்
பூவின்மேற்பிறந்தபதி பூம்புகார்ப்பட்டினமே. (யக)

மூற்றுதமூலையிருவர்முத்துவண்டவாவிடுத்துப்
பெற்றுற்றுமாண்பெண்பிறர்மணஞ்செய்யாவண்ணஞ்
சொற்றார்கள்பிறந்தபெண்ணுயகனைத்தலைசுமந்தாள்
பொற்றுமம்பிறந்தபதிபூம்புகார்ப்பட்டினமே. (யஉ)

கன்னிகர்தோட்காளையர்கைக் காசேனுங்கற்புடையே
னென்னுமொருமனைத்தொழும்பியேனையர்கற்பாருரைப்பார்
நன்னகரத்தியற்பாற்போமனதிதெனத்தெற்கேகும்
பொன்னியுடைப்படைத்தவள்வாழ்பூம்புகார்ப்பட்டினமே. (யஙு)

வேறு.

புயலோங்குஞ்சையகிரிப்புறத்தில்வெண்காவிரிப்பரங்கன்புறத்திற்போந்து, வயலோங்குஞ் சோணாட்டுமண்ணுயிருண்டின்புறவோமாலுக்கேனு, மியலோங்குமனையாக விருப்பதற்கோகடலாட வெண்ணியோதன், னயலோங்கும் பூம்புகார்ச்சங்கமுகத்துறையாகி யமர்ந்ததன்றே. (௰ச)

இன்னபொன்னிமன்னுமலைக்காரகிலுமாரும் போரியத்தின்கோடு, மின்னுமணிகளும் பொன்னுஞ்செழுந்தேனுங்கொழுங்கனியும்விரைமென்பூவும், பன்னரியபலவளனுங்காவிரிப்பூம் பட்டினத்துப்பரப்பவாங்கி, யந்நகரங்கடல்வளத்தால் யாவருக்குமள்ளியள்ளி யளிக்குமாலோ. (௰ரு)

முடக்கியபாடகக்குனிப்பிற்பற்பலதீவினிற்பொருள்கண் முகந்தீந்தி, யெடுக்குமணிநாவாய்கள் நாவாய்கள்புகலரிதா மெழிற்பட்டாடைத், துடக்கொடிகளசையவிசைக்காலே கவடந்துள்ளத்தள்ளாடாம, னடக்குமிடத்திருந்தேறிற் பொற்றேவரெழுந்தருளாட்டலாமே. (௰சு)

போற்றுமளகாபுரியு முயருமமராபதியும் பூம்புகார்க்குந், தோற்றுறையுமாறுபெருதேக் கறுமாற்பாணுதசோநிநாத, ராற்றலிடங்கொண்டிருந்தார்சிவஞானவெண்காடரமர்ந்தாரன்னோர்க், கேற்றங்குறைகுபேரனையும்வச்சிரவாளனையுநிகரிசைக்கொணுதே. (௰எ)

செய்யதிறப்பவளவல்லி மவுலிமணிகண்டமெண்டோட்டிருந்துமேவு, மையனுறைபல்லவனீச்சரமுமவிர்வரிபிரசுவமுநமாந்தி, மையலிசைத்தேனளிக்குங்குளிர்சோலை நிலைமலியவளமாடஞ்சூழ்ந், துய்யுநெறிதருஞ் சாயாவன முமவன் கோயில்களுமொளிருமாலோ. (௰அ)

வெள்ளிமலைபொன்மலைதூமணிமலைகள்வெண்காடர் வீட்டினிட்டமொள்ளியசோதியரிவரை யாட்கொள்வாளுளாகியுவந்துவந்தாற்றெள்ளியராம்வாக்கிவர்களுளவேனுமிங்கிருக்கச்செய்தார்போலும்புள்ளினொலிமலைசோலை வேதவெளிமலை சாலைப்பூம்புகாரே. (௰௯)

கொள்வார்தம்பேரோதை கொடுப்பார்தஞ் சீரோதைகுளிர் சங்கீன்ற, வெள்ளாரக்கருங் கடலிரோதையினைவிழுங்கியிருவிசும் பினோங்கு, முள்ளாருஞ் சிறுவீதிபலசாதித்தொழிலோதை யொழிவிலாவாம், பொள்ளாதநாகமணி யங்கடொறும் விளக்கொளிரும்பூம்புகரே. (உ0)

நாரதனரிசைமடந்தை யிசையமுதஞ் செவிவார்ப்பநயந்து கேட்போன், வாரணங்குந்தனை முலையாமுருப்பசிவாராதிருக்கும் வண்ணங்கண்ணிச், சீருலகின்மானிடமாமகளாகப் பிறக்கவெனத்தேவர்கோமான், போரியைந்த சாபமிடமாதவியாயவள் பிறந்தபூம்புகாரே. (உக)

தெய்வமகள் மானிடமாமகளாக மானிடப்பெண்டெய்வமாகச், செய்தவன் வாசவனென்னக் கண்ணகியை விமானத்திற்சேர்த்தியன்றோட், டுய்யகணவனைச்சேரச்சேர்த்தினன் முன்னுள்ளமாதுறைந்தவாரும், பொய்யுரையாமாந்தர்களுமிறும்பூது நிறைந்தேறும் பூம்புகாரே. (உஉ)

வேறு.

நெடுங்கருங்கோட்டுப்புன்னைநிறைந்த பூங்கொத்திற்செந்தேன்
படுங்கருந் தும்பிமார்திப்பாட்டிடும் பொன்னிநாட்டு
ளொடுங்கிடைமடந்தைமார்களுண்டு கொண்டாடுந்தண்டேன்
விடும்பரிசென்னக்கானம் விளைப்பராம்பூம்புகாரே. (உ௩)

தொக்ககார்மின்னித்துன்னுஞ் சோலைசூழிடங்கடோறும்
புக்குறுதியமாக்கள் புரும்புனற்பொன்னிநாட்டுத்
திக்கெலாம்புகழுநல்லோர் செல்குவார்மல்குவாராய்த்
தக்குளாரல்லார்பொல்லார்தாம் புகார்பூம்புகாரே. (உ௪)

கன்னெடுங்குன்றந்துன்றுங் கடிகமழ்குறிஞ்சிமான
நென்னெடுங்குன்றந்துன்று நெடுநிலப்பொன்னிநாட்டு
மின்னெடுங்குன்றந்துன்று மின்னிடைமார்பாற் கொங்கை
பொன்னெடுங்குன்றந்துன்றும் புண்ணியப்பூம்புகாரே. (உ௫)

வெளிதங்கும் வெண்ணெற்போர்கள் விண்ணளப்பனபோலன்று
மளிதங்கிமுரலுஞ்சோலை யாலயம்பொன்னிநாட்டு
மொளிதங்குசங்கினுர மோங்குபூங்குவாலமெல்லாம்
புளினங்கள்போன்று தோன்றும் புண்ணியப்பூம்புகாரே. (உசு)

வேறு.

காரோடுங் களிற்றேடுங்கடற்றிரைவாம்பரியோடுந்
தேரோடுங்கலத்தோடுந் தேவர்கள் செல்வர்களோடும்
பாரோர்களையுறுவார்படைக்குழாமெனப்பகர்வா
ராரோவிந்நகர் புகழ்வாரளந்தறியா வளந்தருமே. (உ௭)

இந்நகர்போலெந்நகருமிவ்வுலகத்திடைக்காணேம்
பொன்னகரோவெனிலந்தப் பொன்னகர்வாழ்புரந்தரனே
மன்னியபூவினிற் போந்துவளம் பிறங்கவனைவித்தா
லெந்நகரும் பூம்புகார்க் கேற்றமினையிலவாமே. (உஅ)

பூம்புகார்ச்சருக்க முற்றிற்று.

ஆக - திருவிருத்தம், ருசு.

## ஆட்கொண்ட சருக்கம்.

மடைமருதநறும் பழனங்கரும்புகளும் பெருஞ்சாலிவளங்க ளோங்கப், புடைமருதவனஞ்சூழத்தவமியற்று முனிவர்குழாம்பு கழ்ந்துபோற்ற, விடைமருதிலிருந்தபிரானிருங் கருணைத்திறம்பிற ந்தவியல்பினாலே, படைமருதந்தரவளவெண்காடரை யாட்கொண்டதொருபரிசுசொல்வாம். (க)

வேறு.

பொன்னிலங்கிய பூம்புகார்ப்பட்டினந்
தன்னின்மன்னுந் தலைவர்கலைகளாற்
பன்னரும்புகழ்ப் பட்டினத்துப்பிள்ளை
யென்னுமிக்குடிநாமமியன்றுளார். (உ)

கருணையாளர் வெண்காடரெனும்பெயர்
மருவினார்மணிவண்ணனின்வாழ் குவார்
பொருவிலாச்சிவபுண்ணியநண்ணினு
ரிருவிசும்பினமரருமெண்ணவே. (௩)

கலங்களெண்ணில் கடலிடையோடுவ
நிலங்கள்புக்கு நெடுந்துலை நீணிதிக்
குலங்கள் கொண்டு குலாக்கொடுமீள்குவ
வலங்களாயிரமாயிர மென்பவே. (ச)

காணுமின்னவைகற் புடைமாதரார்க்
காணியாங்கலமாயிரமென்பரால்
வாணிகேள்வன் வகுத்ததன்றிச்செல்வ
நீணிலாமுடி நித்தனளித்தவே. (ரு)

கற்பகப் பெயர்க்காமருதாருவும்
பொற்புநீடிய பூமணிச்சங்கமும்
நிற்பகற்பக வெண்காடர் நின்றதா
மற்புதத் திருவெண்காட தாகுமே (சு)

அரசருமிவர்க்கஞ் சுவர்நெஞ்சுளே
பரசுபாணிப்படையுடைப்பண்ணவன்
விரதநிற்கும்விறலுடையோரெனு
முரசுமும்முரசும் முழங்கும்மரோ. (எ)

மூன்றிரேறு முழுமணிவாளொளி
குன்றவில்லியடியர்குழாங்களுந்
துன்றுமென்றுந் தொடுகடன்ஞாலத்து
ளொன்றுமீங்கிவர்க்கொப்பல வென்பரால். (அ)

கோடிசெங்கதிர்கூடியுதித்தென
நீடுசோதி நிமலரைப்பாடுதற்
காடுமன்புவர் தங்குரித்தங்குரித்
திடுகொண்டங் கிருக்குமியல்பினர். (௯)

கற்றகல் வியுங்கேள்வியுங்காண்குறிற்
குற்றமின்றிக்குணங் கெழுகொள்கையார்
முற்றுமீங்கிவர் நன்குமொழிகுவார்
செற்றமேவுஞ் சிவனடியார்களே. (௰)

சத்தியாங்குறு சம்புவின்றுண் மனம்
வைத்தசெல்வமுமண்ணினமக்குறு

துய்த்தசெல்வமு முள்ளுமுள்ளத்தராய்
வித்தகத்தர் விளங்குமந்நாளிலே. (௰௧)

வேறு.

மஞ்சு சூழ்தரத்தேன்றுளிப்பூந்துணர்வயங்கச்
சஞ்சரீகங்கள் சஞ்சரித்திசைத் தமிழ்தழைக்க
வஞ்சலித்தமர் முனிக்குழாமாரமுலோம்ப
வஞ்சமில்லரன்வாழ்வதுமருதமாவனமே. (௰௨)

அவ்வனத்திடைமருதிடத்தருளுருக்கொடுசேர்ச்
செவ்வியானந்தத்திருப்பொருளிருப்பது தெளிந்தே
யிவ்வுருக்கொடுதிருப்பொருளிருப்பதென்றுணராப்
பவ்வநான்மறையவைவலோரெங்ஙனம்பகர்வார். (௰௩)

அப்பொருட்குருவுருவுகொண்டாளிழற்கதுவிச்
செப்பவவ்வுருமுனிவர் நால்வருமுளந்தெளிந்தா
ரிப்படிக்கலாற்றேவருள் யாவுமேயறியா
ரொப்பிலப்பொருளுருவு கொள்ளாதெனவுரைப்பார். (௰௪)

அந்தமாந்தருங் கண்டருங்கதிவிதியடையச்
சந்தமாவிலிங்கப்பெயர் தாங்குசெஞ் சடையோன்
சிந்தையன்பிறைற்புடவியிற் செறிந்தமானவர்கள்
நந்துவானவர் போற்றவீற்றிருக்குமந்நாளில். (௰௫)

ஏகநாயகனுகிய தன்னிருத்திருத்தா
ளாகமூன்றுகாலங்களும் பூசைசெய்தருள்வோன்
மாக்நாடரும்பணி சிவமறையவன் வறியோன்
போகமாகவும் பூங்கூடிப்ருத்தவும் புகழ்வோன். (௰௬)

மனைவிபோயவன்றனிமையோன் மனங்கவன்றிருப்போ
னினியமாமனையாட்டியைப்பெறும்படி யெண்ணிப்
புனிதநாதனைப்பூசனை முடிவினிற்போற்றிக்
கனகமீந்தருடோஙகபாகாவெனக்கழறும். (௰௭)

அன்பினிற்பிரியாதவள் பாகவென்றன்றோ
னன்பினிற்பிரியாவகை யுறுதினமிரப்ப

வன்பினிற்கன்பனாகியவமுதனாதலினா
லன்புருக்கொடு வருவதற் கிசைந்தன னருளால். (௰௮)

அன்னவேதியற்கருந்தனமளிப்பவுங்களிப்பா
லின்னறீர்ந்தவெண்காடர்க்குக்கதியளித்திடவு
மன்னுபூவுலகத்துளோர்கண்டு வாழ்வுறவு
மென்னையாளுடைப் பரம்பரனொருவடிவெடுத்தான். (௰௯)

மருதவாணனென்றொரு பெயருலகெலாம் வழுத்தப்
பருவமெண்ணிரண்டாண்டுடைப்பண்ணவனாகிக்
கருதினுங்கணிற்காண்பினுங் கேட்பினுங்கலந்தோ
ருருகுமன்பினன்றன்னைத்தானருச்சனையுவப்போன். (௨௰)

எழுதுமெண்கணக்கியாவையுமறிபவருன்னன்
மழுவிளங்கெழுத்தாணியாத்திரித்துவாண்மலர்க்கைப்
பழுதில்புத்தகத்தேடுநீடேடெனப்பரித்து
மழகுதுன்றிவன்யாவனென்றி யாவருமறிய. (௨௧)

பிட்டுவட்டவான்கடலிடைப்பிறந்தகாரால
மிட்டபிச்சை வேட்டுவன்றசை சேந்தனாரீந்த
கட்டுமட்டவிழ்போலவெண்சோறுகைக்கொண்டு
முட்டநின்ற தாட்டாமரைப்பூ மகள்முடிப்ப. (௨௨)

வந்துநம்பிவாழிடவகையிடைப்புக்குமிக்க
கந்தமார்கடுக்கையுறுகண்ணியன் கனிவா
விந்தவாரமுதுண்டிடச்சுவைக்கறியீக
வந்தனாளவென்றறைதலும் பூசுரனறைவான். (௨௩)

அறுசுவைக்கறியமுதுநின்வாக்கினாலறிந்தேம்
நறுமைமேவிய சிறுவகேளெனவிறைநவின்று
னிறைவணங்கையிலன்னமங்கோரிடத்திருத்தி
யுறையுமில்லற நங்கையெங் கேயெனவுரைத்தான். (௨௪)

பொன்னுலாவியசெஞ்சடைப்புராதனன்புகல
வன்னவேதிய னியம்புவா னமருமில்லறத்தாள்
மன்னுநாயக னுலகுளா ளென்றுரைவரைய
வின்னும்வேறொருகன்னியைமணஞ்செய்வீரென்றான். (௨௫)

வேறுமிங்கொருகன்னியைவேட்பதற்கன்றேன்
பேறுகாண்கிலேன்வறுமையெம்பேறெனப்பெற்றே
னாறணிந்தவர்திருவுளமின்னதென்றறியேன்
றேறுமன்னவர் நினைப்பரேற்றிருவெலாஞ்சேரும். (௨௬)

என்றவாய்மொழிகேட்டலு மெழுந்திளங்காளை
நின்றதாய்தமரொன்றிலேனிகழுமெப்பொழுது
மொன்றுலோகத்திற்றொழிலெலாம் வல்லமையுடையே
னென்றனைக் கொடுவிற்றுநீர்வறுமைதீர்ந்திடுவீர். (௨௭)

சொற்றுளேனெனப்பூசுரனினவுளந்துளங்கிக்
கற்றகல்வியான் மேல்வருவனமனங்கருதி
யிற்றைநாளுனைவிற்பனேல் விளைவதிங்கென்றே
பற்றிலேனின்னகாரியம் பழுதெனப்பகர்ந்தான். (௨௮)

பழுதடைந்திடிற் பரிகரித்திடலுமென்பார
முழுதும்வல்லவனெவ்விடத்தியாவையுமுடிப்பா
னெழுதுமாவணமீங்கிவர்க்குண்டெனவிசைத்தாற்
றொழுதுநீதியாய் முடிவுறுமிவ்வணந்துணிவே. (௨௯)

நீதியன்றிது சிறுவநீ நிரப்பியவார்த்தை
வேதியர்க்குழாமரசராளேவலோர்வினைவிற்
றீதுசெய்குவார்வைகுவார்சிறுநகை செறிப்பா
ராதலாலிவை தவிர்தலேயறனெனவுரைத்தான். (௩௰)

அஞ்சலையநீர்விலைக்குறவிற்பதேயழகா
லெஞ்சலில்பொருடருவதற்கிசைந்தியானிசைந்தேன்
வஞ்சமில்லதோர்புண்ணியமென்னுழிவருமாற்
செஞ்சொலாமெனப்புண்ணியன்றேற்றிடத்தெளிந்தான். (௩௧)

தெளிந்தபூசுரனுவணம்பழம்படித்திட்டி
விளங்கநல்கினேன்றனைக்கொடுகோயிலுண்மேவி
வளங்கொளூதனைவிடைகொண்டு பூம்புகார்மருவக்
களங்கமொன்றிலான்படர்ந்தனன் காவதமநேகம். (௩௨)

சுந்தரப்பெருமானையினார்க்கு முன்சுடர்ப்பொன்
றந்தவள்ளியோனவர்குலத்தலைவரா மொருவற்

குய்ந்திடப்படிக்கா சளித்தவனிவருடன்போய்
நந்தலில்லவாந்தமணியமீகுவானடந்தான். (௩௩)

சங்கவான்றமிழ்மதுரையிற்பாணனார்தமக்குத்
துங்கமாகியவாளௌவிந்தனஞ்சுமந்தா
ரிங்குமாங்கதுபோன்றனராட்கொள்வானெண்ணி
யங்கவாருயிர்யாவையுமடிமையாவுடையார். (௩௪)

புக்குளாரிலர்புகாரெனும்பட்டினப்புடைபோய்
மிக்கநீதியால் வாழ்வணிகேசர்தம்வீதிப்
பக்கமேவிலேபகர்ந்தனர் பகரலும்பரிவாற்
செக்கரஞ்சடைமுடியவரடியவர் தெரிந்தார். (௩௫)

மறையவன்றனேயிறையவன்றனேவரவழைத்துக்
குறையுறுதவெண்காடர்முற்காரணக் குறியா
லுறையுமீங்கிவணிடத்ததிசயமென்கொலுரையீர்
நறையுலாவியவிடைமருதுடையநாயகரோ. (௩௬)

இயம்புமம்மொழிக்கெதிர்மொழி யிவர்சொலாமுன்னர்
நயம்புணர்ந்தவாளாயவனலங் கொளாநவில்வான்
வயங்குநன்மணியாவையும்விலைநிலைமதிப்பே
னியங்குபற்பலதொழிற்குமீங்கெனக்கு நேரெவரோ. (௩௭)

எனுமவன்றனேமகிழ்ச்சியாநோக்கி யெம்மிடஞ்சேர்
வனமருமணி விலைமதிப்புறுதநுமதித்தா
லனேயவன்சொன்னதொக்கு மென்றருமணியளித்தார்
புனிதவாண்மணிமதித்தனன்பின்னரும்புகல்வான். (௩௮)

நவமணிக்கணவிலக்கணமியாவையுநவில்வேன்
கவலுநெஞ்சிலாத்தலைவர்நீரன்னதுகாணத்
தவமியற்றினீர் முன்னரோதிருவெலாந் தழைப்பப்
பவமகற்றவும் பெற்றுளீரறிவெனப்பகர்வான். (௩௯)

வேறு.

பார்க்கவ முனிவன்சொன்னபடிவலாசுரன்றவங்கள்
சீர்க்கவேசெய்யச்செய்யச்சிவனவன்முன்னர்த்தோன்ற

வேர்க்கின்றதவங்கணன்று வேண்டியதென்னையென்னத்
தார்க்கொன்றை மௌலியானைவணங்குபு சாற்றுகின்றான். (௬௰)

என்னுடைவடிவமெல்லாமினமணிவடிவமாக
நின்னதுகருணையாலேயருள் கெனநிமலனீந்து
முன்னரோமறைந்தபின்னர் முனைவலாசுரனும்போந்து
பன்னருமகவான்யாகப்பசுவெனத்தயாவின்வந்தான். (௬௧)

வந்தவப்பசுவைப்பற்றிவச்சிராயுதத்தினாலே
யுய்ந்திடவுரிந்துகொண்டவுறுப்பினைவிண்ணோருண்ண
வெந்தவவ்வுறுப்புத்தப்பி வீழ்ந்தனவித்தாய்மண்மேற்
சிந்துவிற்பொருப்பிற்றீவிற்சிறந்தநாட்டினிற்பரந்தே. (௬௨)

விளைந்தனமணிகளாகவிண்ணவர்மண்ணோர்பூண்பார்
வளம்படு வெற்றிவீரவலாசுரனுடல மொன்பான்
களங்கமின்மணிகளாகிற்புனிதமேகாண்மினென்ன
விளங்குலகுபகாரத்தால் வீந்தனன்புநிதமாக. (௬௩)

மன்றுளேயாடு மெங்கண்மாணிக்கக்கூத்தனார்க்கு
நன்றிசெய்வார மேழுநவமணிவிழாவிற் பூண்பா
ரென்றிடிற்சங்கையிங்கேனிவைதரிப்பவர்க்கு வென்றி
யொன்றியவீரஞ் செல்வமோங்குமென்றுரைக்குநூலே. (௬௪)

மலரணிமாலைமேலாமணியணிவண்ணமாலை
விலைமணித்தாரைப்பற்றமாணிக்கமாலைமேலாம்
பலமெனவாகமத்தும் பகர்தருமாதலாலு
மிலகியமணிகடேவர்யாவரும்பூணலாமே. (௬௫)

ஞாயிறுமாணிக்கங்கோமேதகந்திங்களாரம்
வாய்வயிடூரியஞ்செவ்வாய்வளப்பவளமாகு
மேயவன்புதனிற்பச்சை வியாழமாம்புட் பராகங்
காய்கதிர்வெள்ளிவச்சிரங் கடுஞ்சனிநீலங்காணே. (௬௬)

பசுவென்புவயிரம்பல்லு பனிமுத்தங்குருதியோதில்
வசையறுதிருமாணிக்க மயிர்வயிடூரியங்கண்
டசைபவளங்கணீலந்தரும்பிச்சுபச்சைமெச்சு
நிசகவம்புட்பராகநிணங்கோமேதகமென்றுமே. (௬௭)

வயிரமுத்தந்தனூன் மாணிக்கம்பவளம்வேந்த
னயமலிபுட்பராக நல்லகோமேதநீதி
வயவையிடூரிய மூன்றும் வாழ்வுறுவணிகனுரு
மியலுடைநீலம்பச்சை யிரண்டுஞ்சூத்திரனுமன்றே. (சஅ)

படிகமஞ்சனக்கற்கூட்டிப்பதினொருமணியாச்சொல்ப
முடிவுறுமிம்மணிக்கு முக்குணப்பிரிவுஞ்சொல்வாம்
வடிவுறுபடிகமுத்துவைத்தசாத் துவிகமாமால்
விடுசுடர்மாணிக்கங்கோமேதகமிராசதம்மே. (சகூ)

அஞ்சனக்கல்லு நீலமாலுந்தாமதமதாகு
மெஞ்சில்சாத்துவிகத்தோடு மிராசதங்கலத்தல்வச்சிர
மஞ்சுறு புட்ப ராக மணிவயி டூரியமாகுந்
தஞ்சராசதங்கலந்தசாத்விகம்பச்சையாமே. (ரு௰)

நவமணியர்ச்சித்தற்கு நறுமலர்ப்புனைதல்சொல்வாந்
தவறின்மாணிக்கத்திற்குத்தாமரைப்பூத்தரிக்க
வுவகையாமுத்துக்கோதுமொண் சிறுசெண்பகப்பூ
வவைபடுபவளம்பார்க்கிற்கமழுஞ் செவ்வல்லிப்பூவே. (ருக)

மரகதங்காந்தம்புட்பராகமல்லிகைப்பூவச்சிர
முரைதருநீரிற்பூத்தநூறிதழ்த்தாமரைப்பூ
கருநீலங்கருவிளங்கோமேதகங்கமழுங்காவி
திரைவயி டூரியப்பூத் தேம்படு வெண்மந்தாரம். (ருஉ)

தூயநன்னிலத்திலொத்தசுத்தபீடத்தைவைத்து
மேயவப்பீடமீதுவெண்படாம்விரித்துவைத்துப்
பாயவப்படத்து நாப்பண்பதுமராகத்தைவைத்துச்
சேயவாதவனுதிக்குந்திசைமுதற்றிசைகடோறும். (ருந)

கோமேதநத்துமுத்துக்குளிர்வயிடூரியஞ்செந்
தூமேவுபவளம்பச்சை சுந்தரப்புட்பராகம்
யாமேவுவயிரநீல மெண்டிசைவலஞ்சூழ்வைத்துப்
பூமேவமுன்னஞ்சொன்னபூவினாற்பூசைசெய்வார். (ருச)

தோன்றியவயிரமென்றசொல்லுக்குப்பொருளென்னென்னின்
மூன்றுலோகத்திலுள்ளமுறையுலோகங்களெல்லாந்

நின்றவைதுளைக்குந்தன்னைக்கிளைபடைதுளையாதென்று
மான்றவிச்செய்கையாலப்பெயர்பெற்றுமேலுமாமே. (௫௫)

ஒருவலாசுரன்றதீசியுடலென்புவீழ்ந்ததேச
மரதனநாடென்றுகுமத்தேசங்கௌசலாதி
வருமதிலுதித்தவச்சிரம்வாகைப்பூநிறத்தவாகும்
புரைகலிங்கத்துதித்தவயிரம்பொன்னிறத்தவாமே. (௫௬)

மாதங்கதேசவச்சிரமல்லிகைமலரின்மேனி
பீதஞ்சேரிமயவெற்பிற்பிறந்தன தவளமேனி
நீதங்கின்மாராட்டத்திற்செனித்தனசிவத்தமேனி
யோதுஞ்சவ்வீரதேசத்துதித்தனகரியமேனி. (௫௭)

பேசியபௌண்டரத்திற்பிறந்தனகுவளைமேனி
யோசையேமக்கதேசத்துதித்தபொன்னிறத்தவிப்பால்
பூசியவாகைவாழை மூங்கிலின்பூநிறத்த
மாசிலாவச்சிரங்கட்கச்சுதன்றெய்வமாமே. (௫௮)

ஓரமாருய்வெளுத்தவயிரத்தேயும்பர்கோமான்
பாரியபசுவின்கொம்பிற் பலநிறவயிரங்கூற்றுங்
கூரமுள்ளிலவம்போது குலாவியபலாசம்பொற்பூச்
சேரியவயிரத்திற்குத்தெய்வமிவ்வாயுவாமே. (௫௯)

கோங்கலர்நிறஞ்சிறந்த குறையுருவயிரத்திற்குத்
தேங்கியநாரஞ் சேருந் தெண்டிரைவருணனுரு
மோங்கு நீர்நிறவச்சிரத்திற்கொளிகொள்வெண்டிங்கட்டேவன்
பாங்குறுகோபமேனிவயிரத்தே பரிதித்தேவே. (௬௰)

தீநிறவயிரத்திற்குச்செய்யதீக்கடவுட்டெய்வ
மானவிவ்வயிரத்துள்ளு மமைந்தநாற்குல முமுண்டு
வானுறுபடிகம்பாயுமுயற்கண்வாழைக்குருந்து
நீணிறைகார்வானத்து நிறமணிமறையோராதி. (௬௧)

வயிரங்களுன்குமந்தவருணத்தோரடைவிற் பூண்பார்
செயிரொன்று முருவிவற்றுட் செங்கதிர்வயிரஞ்செப்பிற்
பயிலுறுவிலைமதிக்கப்படாததிற்பணிகள்பூணார்
தயிரியஞ்செல்வமாரோக்கியந்தருந்தரிக்கலாமே, (௬௨)

அரசர்தமௌலிமேலுமணியொளுவரசிமார்க்கு
மருவியதாலிப்பூணில்வயிரத்தாற்பண்ணவொன்று
பரவுமிவ்வொன்றுமன்றிப்பற்பலவயிரத்திற்கு
மிருமைசூழ்குணங்குற்றங்களின்னுமிங்கியம்பலுற்றேன். (சுஙூ)

அவன்றிடுதாரைசுத்தி நோய்மையிந்திரசாபம்நே
ருவந்திடுபலகையாங்களேங்கிய வெண்கோணங்க
ளவர்தவிராறுகோணமைந்து கோணங்களாக
நிவந்துளகுணங்களேழா நிகழ்த்துபமணிநூல்வல்லோர். (சுச)

குலவியதாரைகேடுகொடுந்தாரைமழுங்கல்கீற்று
மலமொடுகாகபாதம் வருதுளைபிளத்தல்விந்து
பலகொடிகெடுதல் கோடிமுரிதல்சப்படியிருத்து
விலகியகுற்றமீரா றென்றனர் வென்றிநூலோர். (சுரு)

அம்புவாளிம்பர்தையாவாட்படைஞாட்பில் வெல்வார்
செம்பொருட்சிறுதேசத்தார் செலுத்துவர்பஃறேயங்கள்
பம்புநல்குரவு பூதம்பசாசுபாம்பங்கி தீண்டா
நம்பமுன்சொன்னசூரியநல்வயிரங்கொள்வார்க்கே. (சுசு)

இனிமுத்தின்குணமுருட்சியியலும் வான்மீனின்றேசு
கனமறுவின்மைநோக்கிற்கவினுறல்படிகநன்று
வினவுமண்ணேறல்சென்னீர்சிவப்புமென் முகங்கறுத்த
லினமருளிவற்றிறேடு கோணலென்றீரைங்குற்றம். (சுஎ)

பணிமதிகதலி மேகம்பைந்தொடி கழுத்தாவின்பற்
றனியானையேனக்கொம்பு தடங்கராவுடும்பு கொக்கு
வினையராச்சலஞ்சலஞ்சங்கிப்பிமீன் மூங்கிற்பூக
நினைசெந்நெற்கரும்புகஞ்ச நிகழிருபது முத்தினும். (சுஅ)

இருபதுமுத்தீன்றுலுமிப்பியின் முத்தோநன்றால்
விரவுமைப்பசியிற்சோதி மின்னெறிசிறிதுநாளில்
வருமிப்பிவாயில்வீழ்ந்தமழைத்துளியொளி முத்தென்ப
தருமணிநெடுநாட்செல்லிற்றாய் வயினுருகியொன்றும். (சுகூ)

தடங்கடலிலங்கைமூதூர்ச்சமனொளிசூழ்ந்தபாங்கர்
மடங்கலிலலகையாறு மாவிலிகங்கைதங்கி

யிடங்கொள்கம்பலையினோடு கல்லிணையெனு நான்காற்றிற்
றிடம்படவிளைமாணிக்கத்திறங்களுமறிந்துசொல்வாம். (௭௰)

குருவிந்தமொடுசாதாங்கங்கூறுகாவாங்கநன்மை
மருவுசௌகந்தி நான்கின்வடிவினிற்குணங்களீரா
றுருவினிற்குற்றமீரெட்டொளிக்குணமிருபத்தொன்பான்
பரவெளிக்குற்றந்தீரப்பன்னிப் பின்பகரலுற்றும். (௭௧)

செங்கையிலெடுக்கிற்றேய்க்கிற் றீயினிற்சேர்க்கிற்றூக்கிற்
பங்குறுதகட்டிற் குச்சி னிற்பகர் வெயிலினள்ளின்
மங்குதலிலாவோரத்தின் மருத்திற்கைக்குறியினெய்த்துந்
தங்குபார்வையினினேர்ந்து சிவந்துசார்குணமீராறே. (௭௨)

கருகுதல்போதில்செம்மண் கருட்புகையிறுக்கல்கோடல்
திருகுதல்முரண்டராசுமத்தகங்குழிதல்செப்பில்
விரவியபுடாயம்நெய்ப்பில் காற்றிலைச்சுமியேவெச்சு
மிருமைதீர்சந்தைகேடென்றிவைகுற்றம்பதினாறுமே. (௭௩)

சாதகப்புள்ளிறோட்டந்தாமரைகாவிகோபங்
கோதின்மின்மினியாதித்தன் கொழுங்கனலெரிவிளக்கு
மாதுளங்கனிப்பூப்பத்துஞ் சாதாங்கமணிக்குணங்கா
ணோதியகுருவிந்தத்தினொளிக்குணமினிமேற்சொல்கேன். (௭௪)

செம்பஞ்சோடரத்தநல்ல திலகநீளிலோத்திரஞ்சீர்
நம்பியமுயலின்சோரிநக்க சிந்தூரங்குன்றி
வம்புறுமுருக்கம்போது வரு மெட்டாமசோகுசெம்பஞ்
சம்பகமலரி செம்போடிலவம்பூவருங் குயிற்கண். (௭௫)

இவ்வாறுஞ் சௌகந்திக்காமெழிற் குணமினிக்காவாங்கின்
மெய்வாய்த்தகுணங்கார்ப்பூவெண் கோவைசெங்கமலமஞ்சள்
துவ்வாயகுங்குமம்போற் சொல்லொளியோரைந்தாகு
மவ்வாயமணிக்குணங்களாகவோரிருபத் தொன்பான். (௭௬)

நீலத்தின்குணங் காயாம்பூ நெய்தற்பூக்குல்லையப்பூக்
கோலியகுழக்கன்றின்கட் குயிற்கழுத்தவிரிச்சாறு
வாலியமேகமெட்டாங்கிட்டமஞ்சணிதாசு
மேலுமன்பிணிகொள்வச்சிரசஞ் சர்ச்சரையெட்டெனம். (௭௭)

பவளகுணஞ்சிந்தூரம் பன்னுசெம்மணிச்சங்காய
அவமுசுமுசுக்கைவீரை ஆதணம்பழம் போன்றுருங்
கவைமுடர்துளேகறுப்புத் திருகுதல்வெளிறல்கல்லென்
றிவைகளோராறுங்குற்றமென்பர் நன்புலமையோரே. (எஅ)

பச்சையின்குணங்களோதிற் பசுங்கிளிமயிற்கழுத்து
மெச்சிளம்பயிர்பொன்வண்டின் வயிறுமின்பொன்பசுத்தல்
நிச்சயப்பத்திபாய்தனெய்ப்பெழாவெளிறுகண்மண்
கச்சிடுந்தராசங்கற்றல் கருகுதல்பெறலேகுற்றம். (எகூ)

தழைவயிடூரியம் பொற்றகட்டினின்மூலப்பால்வார்ப்ப
வொழுகியவொளியாங் கோமேதகம்வயிடூரியத்திற்
றழுவுதன்மேனியாம்புட்பராகம் பொற்றகட்டிற்றேன்பாய்
முழுநிறமாமிவைக்கு மும்மணியென்றுநாமம். (அ௦)

அத்தனூரிச்சுரத்தால்வருமணிப்பச்சைசெம்மை
யொத்தொருநிறமதாக்குமொள்ளெரி யொளிவெள்ளாரம்
வித்துருவங்களென்றும் விளைவின்றிவிளைவிப்பார்க
ளுய்த்தகண்மணி யானேக்கினெண்மணிபோலுமாலோ. (அச)

நல்லியற்கோரவல்லி நாட்டியகனககோர
வல்லிசொல்லியவாமற்றுமணிகளுமேரு வெற்பிற்
சொல்லியனடவாநிற்குந் துணைமணிவிடங்கடீர்க்கு
மொல்லியன்மணிகள்யாவு மும்மணியாகுமன்றே. (அஉ)

மாணகமீன்றவான்றமணிகளுமான்மார்பின்க
ணானதமணியுஞ் சிந்தாமணியுமாங்காங்கறிந்து
வாணடர்மகுடக்காசுமதிப்பனவருமென்றென்று
பூநாகஞ்சடைக்கணிந்த புண்ணியனருளிச் செய்தான். (அங)

மற்றுளதொழில்வெவ்வேறுவல்லமைசொல்லு நல்லோன்
குற்றமில்குணத்தானென்று குறித்தனர் திருவெண்காடர்
செற்றமில் சிந்தையிந்தமைந்தனே திறைகொண்டானென்
றிற்றுணர்ந்தந்தணாளரெழின்முகநோக்கிச் சொல்வார். (அச)

என்னுடையிடத்திலந்த மைந்தனுற்றிருத்தல்வேண்டு
மன்னவன்றனக்குப்பொன்றோராயிரமளிக்கேன் முன்றுட்

பண்ணியமூலவோலைபலரறிதாலவோலை
யின்னதேநல்கிறென்றார் நம்பியுமியைந்தானன்றே. (௫௫)

ஒருவனைமணம்விலக்கியுற்றவன்றுண்டு கொண்டு
பெருகுமாவணமுங்கொண்டோன்பிறங்குமக்கவன்குலத்தாற்
றிருமணஞ்செய்தவன்றுண்டாகியாவணமீவோன்போன்
றருளினால்வந்தவன்றனுவணந்தனங் கொண்டிருந்தான். (௫௬)

ஈந்தபினெழுந்து நம்பியேகநாயகனையேத்தி
வாய்ந்தவெண்காடர் நீடமாசிலாசிகளுங்கூறிப்
போந்திடமருதிற்புக்கு புதுமணம்புணர்ந்துவாழ்ந்தான்
சேர்ந்திடுமருதவாணன்செய்கைமேலியம்பலுற்றும். (௫௭)

மருதவாணனைவெண்காடர்மகன்மையாக்கொண்டதன்றி
யுரிமைகூரடிமையாக வொருகணப்போதுமெண்ணு
ரருளினாலிவனுமந்தமன்பருக்கன்பனானன்
றெரிவராதிவருந்தானுந்திருநெல்வேலியின் வெயொத்தார். (௫௮)

இவ்வாறிக்கொழுகுநாளி னெழிற்றுழில்வாணியங்கள்
செவ்வானமேனியன்பாலளித்தனர் திருவெண்காட
ரொவ்வாததுறைகடோறு மூதியமதிகமாக்கித்
தெவ்வானபெயரும்வந்து திறையிடச்செய்வித்தானே. (௫௯)

செய்திகளிவையுமன்றிச் சிந்துயாத்திரைக்குப்போந்திங்
கெய்திடல்கருதியாங்குமிங்கும்வேண்டியவையாவும்
மைதிரமதிக்கச்செய்து பற்பலசரக்கு மொக்கப்
பெய்தனர்கலங்கொடுத்தார் பெருந்திருநீங்காதோங்க. (௬௰)

ஓங்கியகலத்தினுளுமோரையுஞ்சேர நோக்கிப்
பாங்குறக்கண்டுகொண்டுபகட்டுமொழுகத்துவள்ளற்
காங்கணியினியசெந்தே னமுதமோடளாவிநல்கித்
தீங்கிலாதானையேத்திச் செழுங்களிபிறங்கினுரே. (௬௧)

அருங்கலமீதுபோது மமுதனைக்கங்கைநங்கை
கருங்கடல்வடிவாய்த்தானுந் தாங்குதல்கருதினுள்போ
னெருங்கலைக்கரத்தாலேந்த நெடுங்கடலோடிநாடி
மருங்குறவணிகமாக்கண்மணங்கலனுருநுசென்றுள். (௬௨)

சென்றுநாடியதோர் தீவிற்சேர்ந்துதான்கரையைச்சார்ந்து
வன்றிறச்சரக்குமாற்றி மறுசரக்கேற்றிப்போற்றிக்
குன்றினின்றிழிவார்போலக்குரைகடல்கலத்தானீந்தி
மன்றலங்கொன்றைவேய்ந்த வாண்டகைமீண்டுவந்தான். (௧௩)

வந்தவாணிபத்தாற்பெற்றவளமெலாம்வளர்பொன்னாக்கித்
தந்தனன்றிருவெண்காடர்தருக்கருமகிழ்ச்சிபொங்க
வெந்திறல்விடையினார்க்கு வேண்டியசிறப்புநல்கி
யுய்ந்திடச்செய்தாரிவ்வாறொழுகினன்வழுவிலாதான். (௧௪)

மந்திரத்தலைமைசான்றமதிமுதுசேந்தனாருஞ்
சந்ததங்கண்டுகண்டு தம்முளேமகிழ்ச்சிபொங்க
வந்துறுமருதவாணன்வனப்புறுசிறப்புவாய்ப்பச்
சுந்தரம்பலிப்பச்செய்தார் சூழ்முக்காறிலாதார். (௧௫)

பின்னருமாரவாரப்பெருங்கடற்புக்கும் போந்துஞ்
சென்னியனாளுந்தீவினுமரும்பண்டங்க
ளின்னிலமதிக்கக்கொண்டுவருமிருங்கலங்களோட்டுந்
தன்மைமீகாமரெல்லாந்தங்கண்மீகாமனென்பார். (௧௬)

ஆயதன்கருணையாகுமலைகடலிடையானந்தத்
தூயமாக்கலத்திலேற்றித் தொகும்பொருடனையேநல்க
மேயசீர்வெண்காடர்க்கு விளையாட்டுகாட்டிநாட்டு
நாயகனின்னவாறுநாடகநடிக்குமாலோ. (௧௭)

இன்னம்பரெனு மூதூருமிருக்குமிவ்வணிகனம்ம
பொன்னம்பர்கமழுமாழிப்பூவம் பர்புழுகுசாந்த
மின்னம்பர்மாலாரம்மைமேருமால்வரையாம்வில்லர்
நன்னம்பரென்றுகாணு நல்லவெண்காடர்க்கீவான். (௧௮)

பரந்தபாய்விரியாதோட்டும்படரெதிர்காற்றிலோட்டுஞ்
சரம்படர்வதுபோலோட்டுந் தடங்கடற்குதிரைநாவா
யரந்தையாற்றத்தார்பூட்டுமவர்களைநகைத்துநோக்கும்
வரந்தருமருதவாணன்வருதிருவிளையாட்டன்றே. (௧௯)

இவனிவணெங்குளானோவெண்ணருந்தெய்வங்கொல்லோ
தவறிலாமோகர்சித்தர் தம்மிலீங்கொருவனேயோ

வவலமொன்றில்லானிந்தவாண்டகையென்றென்றும்
பவர்திருநீங்காதோங்கும்பட்டினம்பகருமாலோ. (௧00)

சிறிதுநாளின்னவாறு திருவுறச்சரித்தபின்னர்
மறுவிலான் முன்போலின்பமரக்கலம்பாய்விரித்து
நெறிசெறிவணிகரோடுநெடுங்கடலொருதீவத்துப்
பொறியுறப்போந்திருந்து புரிந்தவாபுகலலுற்றேன். (௧0௧)

வேறு.

கொடுபோகியசரக்கெங்கணுங்குலவாவிலைநிலவத்
திடமேவிடுநற்பொற்கிழி சேமத்திடையொடுக்கிக்
கொடைமேம்படலாகித்தெரிகுரவோர்மடம்பலபோய்த்
தடநீடியபுகழ்வேண்டினன்றுழாதறம்புரிவான். (௧0௨)

அலந்தோர்களுக்களித்தும் நெறியறிமாதவர்க்களித்தும்
நலந்தீங்கினரென்னாதறநல்கூர்ந்தவர்க்களித்துங்
கலந்தேபொருந்தினர்யாவர்க்குங்கடனுவுடனளித்தும்
நிலந்தேறிடத்தேவேசர்க்கு நிதிவேண்டியதளிப்பான். (௧0௩)

உடன்போந்துளபடுமாந்தரு முடையானறிருவனே
லடங்காதிவன்புரிகாரியத்தாற்றீங்கிழைத்திடுமால்
முடங்காதினியாமாகவிம்முறைகூறிடின்முனிவான்
வடந்தாங்குமென்முலையாரொடுமருவாதொருநலனே. (௧0௪)

என்றென்றவர்மொழியப்பொழியேமக்கொடையுடையோன்
குன்றென்றினவகிர்செய்தறங் குறையாவகைநிறையப்
பொன்றங்கியதிருவாலய மெடுப்பிப்பது பொருட்டா
னன்றென்றியநிமித்தக்கிளைநாட்டிப்பொருள்பூட்டி. (௧0௫)

மாலிங்கமெனத்தான்முளைத்திருந்தான்மணிகண்ட
னுலிங்கனம்பொருந்தாவுடையானும்பெறநானுங்
கோலஞ்செய்சோபானம்முதற்குளிர்தூபியந்தஞ்செய்
தேனும்படிகோலும்படியெல்லாமமைவிப்பான். (௧0௬)

வெண்டிங்களை முடிசூடியவியன்கோபுரமருங்கிற்
கண்டங்கியவாயிற்புடைகளமாமதிலியற்றி

வண்டங் கணியளகாடவிமடமாதருமாடற்
கெண்டங்குமுழாக்கொட்டிமிளமாக்களுமிசைத்தான். (க0எ)

இசைவித்தொளிர் மணிமண்டபமெழிலோங்குறவியற்றி
யசைவற்றிடுமலையான்மகளணி கோயிலுங்குயிற்றித்
திசைவிட்டொளிர்வேழம்முகன் செவ்வேள்சினகரமு
நசையுற்றவிழாமற்றவு நடித்தானுடன்முடித்தான். (கஅ)

தனைத்தானருச்சனையாற்றுதல் சோணாட்டினுந்தடங்கார்
கனைத்தோடியகடற்றீவினுங்கண்டேமெனப்பெரியோர்
புனற்கூட்டியசடைக்காட்டினன்பொருட்பூசனைபுரிந்தூ
னினைத்தாங்குறுசிறுமாக்களுநிறைமாக்கதிபெறவே. (கஞ)

அத்தீவத்திலுள்ளோர்களு மையனுடனடைந்தோ
ரித்தேயத்தரெல்லோர்களுமிறைசே வையினுய்ந்தார்
மெய்த்தானத்துளெக்காலமும் விழைபூசனைபுரிவான்
வைத்தானிலந்தலையூர்களு மற்றுமமைவுறவே. (கக0)

பொன்னுமவைபலவுஞ்செலப்போக்குந்தரனேக்கா
னன்னுமினியென்போர்களுக்கென்னு மினியென்னுன்
பன்னுவருமெருப்பாண்டில்கள் பலகோடிகளுளவாற்
றென்னுவெனவிசைபாடுமின் செல்கொமினியென்பான். (ககக)

எருவட்டங்கணந் தேய்த்து மிலவோபொருள்வருமா
ருருமித்திடுமென்பார்கடலுடனேடியபுடையோர்
வருமித்திறவோர் சொற்சொலவொருமித்தனமைந்தன்
முரணிச்சரக்கேற்றீரென முன்சொன்னமைசொன்னுன். (ககஉ)

கிடையாச்சரக்கேதேனுமிக்கிளர்பூங்கலங்காணும்
நடையாற்றிடைப்போதற்கிவனன்றுத்துணிவுற்று
னுடையே நடக்கிணையாவர்க ளென்றென்றுளங்களித்தார்
தடையாவதுமறப்போதற்குவிரைந்தான்றருக்குடையோன்-ககங.

பலவாய பொற்சரக்கேற்றினர்பலரும்பலமுறுவான்
நலனுமிவன்சரக்காமெரு நகையாடிடவேற்றி
யலையாழியினடக்கும்படியரும்பாய்மரம்விரித்தார்
சிலநாளிடையடைபூங்கலஞ் செல்கின்றனபலநாள். (கக௪)

உடன்போந்துளவணிகக்கிளையுறுதீவிறகிலராய்க்
கடன்கோடற்குக்கரு திக்கொடுகடல்வாய் விட்டிடற்றி
லடங்காவருமவனைக்கடனளிப்பாயெனவ ளித்தான்
முடங்காச்சரக்கிவைபோலவணளிப்பீரெனமொழிந்தான். (௧௧௫)

மொழிகின்றதற்கிசைந்தார்முறிமுக மன்னொடுகொண்டான்
வழிவந்தவன்மதுராபுரி மருங்கேயெரிகரும்பால்
விழைவொன்றிசை யிசையாளரைவெண்றேறிடநின்றே
னழிவொன்றுமிலாதானவர்தமைவென்றிடலரிதோ. (௧௧௬)

கடலோடிய கலநீடிய கரைகண்டது விண்டோ
யிடிபோன் முரசெறிந்தார்நகரெல்லோர்களு மறிந்தார்
மடியாதமனத்தானொடுவணிகக்கிளையெவரும்
படியேறினர் மலர்வாண்முகம்பங்கேருக மொத்தார். (௧௧௭)

திருமாநகரெங்குங்களி திளைக்கத்தெளிவிளைக்கு
மருதாளியும்வெண்காடர்த மணிமாளிகை புகுந்தா
னொருமாமணி யளித்தானவரு வகைக்கடல்புக்கார்
வருவோர்களிற் பொல்லார் சிலர்வந்தின்னனமொழிவார். (௧௧௮)

தீவிற்புகுந்ததுவுஞ் செறிசெம்பொற்றிரட்பெருக்காற்
கோவிற்புனைந்ததுவுங்குறைகொண்டோர்க்களித்தனவு
நாவிற்புகழ்ந்தோர்க்கீந்தது நவின்றாரஃதன்றி
பூவிற்சரக்கெருச்சேர்த்ததும் புகன்றார்நகைபுரிந்தார். (௧௧௯)

என்செய்தனையென்றின்னவன் முகநோக்கினரிவனும்
பொன்செய்திரள்போயிற்றினிப்பொருள்வேண்டியதருகேன்
வன்செய்கையின்வெகுளாதொழிவீரென்றுரைவகுத்தான்
முன்செய்கைமொழிந்தார்களுமுரண்கொண்டயல்போனார் (௧௨௰)

எருப்பாண்டில்களெல்லாஞ் சரக்கிடுசாலையினிறைப்பத்
தருக்காலிவன்சொற்றுனிறை தாழாதுசெய்தமைத்தார்
மருப்பூவணிவெண்காடர்தம்வயத்தாங்கவர் முறிப்பால்
விருப்பாலளித்தனன்வாசித்து வெகுண்டார்பொருள்விழைவார் ( )

பொருளீகுவனெருப்பாண்டிலிற் புக்கொன்றெடுதொழுவா
மருளுள்ளவும் முறியாளரைவரவிங்கழைப்பவர்முன்

கரையொன்றிணையென்றொரு கைவல்லவன்கரைத்தா
னொருவுள்ளொரியெனச்செம்மணிவெயில் விட்டெறித்தனவே. ()

இத்தன்மையிற்கடன்கொண்டுளவெருப் பாண்டில்களெவைக்கும்
வைத்தன்னவர்விலை நோக்கினர் வணிகக்கிளைமாக்க
ளொத்துள்ளனவென்றார் பொருளிலமென்றுரைவரைந்தா
ரத்தன்மையில்வெண்காடருமடிமைத்திறங்கொண்டார். (கஉங)

கொண்டாரருடருமான்றனைக்கொண்டாடினர்குளிர்தோய்
வண்டாமரைமலர் போன்முகமலர்ந்தார்மகிழ்ந்ததற்பி
னெண்டாணிறையெருப்பாண்டில் களாராய்ந்தனரெரிநேர்
தண்டாமணிகண்டாரிலதவமாமிது வென்றார். (கஉச)

எருவஞ்சகனிவனைத்தனியிருத்தித்திடந்திருத்தித்
திருவஞ்செறிபொருள்கேண்மின்களென்றாதுசெய்தார்
கருநெஞ்சினனவர்பக்குவக்கவிஞேக்கியங்கிருந்தா
னுருவஞ்சிறிதிலதுண்டலனொருவன்றெளியொளியோன். (கஉரு)

ஒளியானெனவிவனேரிடத்துறைந்தானெங்குநிறைந்தான்
குளிர்போகியகங்குற்பறைகொட்டுஞ்சிறுபூத
மளிநீடியசிலபூதங்க ளாடுஞ்சிலபாடும்
வெளிமேவியகணநாதர்கள் விண்ணோர்குழுத்தழுவும். (கஉசா)

மாலிந்திரன்மலரோன் முதன்மறைமாமுனிக்கணங்கள்
சீலந்தருசிவஞானிக டெய்வத்திரண்மடவார்
ஞாலம்புகழிசை நாரதர்நல்லோர்கலைவல்லோர்
காலம்பலமனுவாகமங் காணும்படிமிடையும். (கஉஎ)

மருதப்பெருமானிங்ஙன மகிழ்நாள்களிலொருநா
டிருவிற்பெருந்திருவோலக்கமிருந்தான்றெரிந்திடுமா
றிருள்விட்டெறிவெள்ளிக்குவட்டிருக்குந்தரமிருந்தான்
மருள்வெற்றிசெய்வெண்காடர்தமனையாரதுகண்டார். (கஉஅ)

கண்டோடினர்வெண்காடர்தங்கருத்தச்சுறமொழிவார்
வெண்டோணிபணிவெண்டையன்மென்பச்சிளம்பாவை
செண்டாடியமிடலாகுவன் சிறுசெம்பவளச்சேய்
தண்டாவிடையுண்டென்றனர் தக்கார்பயமிக்கார். (கஉகா)

பயந்தோடினர்கண்டார்வருபச்சைப்பெருமானுங்
கயந்தோன்றியமலராளியுங்காணாததொர்காட்சி
வியந்தாரொருபேரற்புத மென்றார்மிகவெருண்டார்
நயந்தாருடன்மீண்டார்விழி துயிலார்நவையயிலார். (௧௱)

க்ஙகுற்புலர்சிறுகாலையிலெழுந்தன்பருங்காண்பார்க்
கெங்கட்கிறைமருதப்பெருமாளாய்த்தனித்திருந்தான்
துங்கக்கமலச்சேவடி துணையே துணையாகிச்
செங்கைத்திருமலர்சாத்தினர்சென்னிக்குறப்படுத்தார். (௧௱௧)

புன்மைப்பிழைபுரிந்தேனவைபொறுத்தாண்டிடவேண்டும்
வன்மைக்கொளனினையாதுகொண்மருதப்பெருமானீ
நன்மைப்பொருளாய்வில்லிடுநாதப்பொருளாய
தன்மைப்பொருளாய் நின்றிடுதனியேயெனை முனியேல். (௧௱௨)

ஏவற்றனியாளாயினை முறையோரெனவியைந்தாய்
தாவற்றிடுதேவாயினை தருவாய்த்தருகுருவே
யாவற்றனியேன்றன்னையுமவ்வாறருள்குவையோ
பூவிற்கமழ்மணம்போன்றுயர்புனி தாவெனைமுனியேல். (௧௱௩)

மறையாமறையீறும் பெருவானோர்களுமறியா
விறைவாவெனையடிமைக்கொளவெண்ணித்துணிந்தனையோ
சிறுமானிடனடியேனுறுதெய்வப்பெருமானீ
குறையோவிலைகுறையுண்டெனிற்கூறாயினிமுனியேல். (௧௱௪)

பல்காலிவர்புகலப்பயில் பரநாதனும்பருவ
மல்காவருமுனக்குக்கதிவழங்கு முபதேச
நல்காவருள்செயவந்தன னென்றானவில்கென்றான்
செல்காரியமலரீங்குபதேசஞ்சிவன்செய்தான். (௧௱௫)

செய்தங்ஙனஞ்சிலநாடரித்திருந்தான்சிவநன்னூ
லெய்தும்படிபடியென்றளித்திளஞாயிறுபோல்வான்
கைவந்தனநன்னூல்களுங்கண்டானதுவந்தும்
பொய்தங்கியமருள்வாழ்க்கையும் போகாதவுங்கண்டான். (௧௱௬)

நவகோடிபொற்குவைநீடியநாட்டத்தர்வெண்காட
ரிவைபோயிடத்துறக்கும்வண்ணமெவ்வண்ணமென்றெண்ணும்

பவமாற்றுதற்கிவைமாறெனப்பார்க்குஞ்சிவமாக்குங்
கவலாதசற்குருநாதனைக் காணும்பதம்பூணும். (௧௫௭)

மருளுந்தெருளும்போர்புரிமாறுட்டமுங்கண்டான்
றெருளொன்றிடமருணின்றிடத்திருவுள்ளத்திற்கிடத்தி
யொருதந்திரம்புரிகின்றன னுடையானெவையெவைக்குந்
தருமந்தணப்பொருட்குஞ் சுதந்தரனுனசங்கரனே. (௧௫௮)

ஆட்கொண்டசருக்க முற்றிற்று.

ஆக - திருவிருத்தம். ௧௯௰௨.



## துறவறச்சருக்கம்.



முன்னெறித்தவம்பல முயன்றநன்னரான்
மின்னெறித்தனவெனவிளக்கமோங்குவார்
சென்னெறிக்கதியுறுதிருவெண்காடனார்
பன்னெறித்துறவறச்சருக்கம்பன்னுவாம். (௧)

திருவிடைமருதுடைத்தெய்வநாயக
னொருபுடைக்காதறையூசிவாசியாற்
பிரிவுடைச்சரட்டொடுபேணிமானுறப்
பரிவுடைப்பட்டினுற்பயிலச்சூழ்ந்தரோ. (௨)

ஏற்றபூம்பெட்டியினிட்டுக்கட்டுறத்
தேற்றமாமுத்திரை சின்னஞ்சேர்த்தினன்
கோற்றொடியன்னைகைக்கொடுத்துன்மைந்தனுக்
காற்றலீதளித்தியென்றகன்றுபோயினன் (௩)

பண்டுபோன்றிருந்தனன்பரமநாயகன்
மண்டுகாதலின்வருமதிவெண்காடரும்
புண்டரீகத்திருப்பொருந்துமாளிகை
யண்டனைக்காணவென்றணைந்தபோதினில். (௪)

ஞானசற்குருவினை நயந்தநாயகன்
போனதிக்கறிவுறப்புனிதரானவர்

வானனைக்கண்டிலார்வனசவாள்விழிப்
பானல்வெண்டரளங்கள் பரப்பினாரரோ. (௫)

துருவினாரெங்கணுந்துளங்கிக்காண்கிலார்
வெருவியேயவ்வயின் விரைந்துதாயரு
மருவினார்பெரியவர்மணிகொள்பெட்டியொன்
றருளினாருமக்கெனவருளிப்போயினார். (௬)

எனமொழியேழையப்பேழையீந்தனன்
மனமொழிமெய்களால்வணங்குமன்பருங்
கனைகெழுசிலம்பணிகமலனீந்ததைத்
துனைவினால்விழித்துறச்சோதித்தாரரோ. (௭)

முத்திரைகவிழவிட்டவிழ்த்துமுட்டறச்
சித்திரநேத்திரச்சுற்றுத்தீர்த்தபின்
குத்திரமொன்றறக்கொடுத்ததோர்பொரு
ளாத்திரம்வாக்கினாலறியப்பண்டமே. (௮)

ஒடிவுறப்புரைவிழுந்தூறிக்கூர்முறிந்
தடிபடுகாதறையாகிச்செய்கையாய்
நொடிதரமுறுக்குருநூலுங்கோத்துள
வடிவினாலூசியின்வாசிநோக்கினார். (௯)

நோக்கினார்நீக்கறநெடிதுநோக்கினார்
பூக்கமழ்சடையினார்பொற்புநோக்கினார்
பாக்கியமிதுவெனப்பரிந்துநோக்கினார்
தேக்கியவுலகுவிண்டேறநோக்கினார். (௰)

காதினால்போதனங்காதிற்கல்வினால்
போதலைக்குறிப்பினாற்புகன்றபொற்புமா
மேதருமுலகெலாம்விடுங்குறிப்புமாஞ்
சேதமிப்பாசநம்பாசச்சேதமாம். (௰௧)

ஊசிகாந்தச்சிலையுற்றுப்பற்றல்போ
னாசிலாப்பரஞானமாற்றலா
மாசிலோமென்றுகொண்டலங்கலோங்கிய
மாசினாலங்குலவடிவம்போயினார். (௰௨)

இச்சைஞானந்தொழிலிவைகளீசனா
ரிச்சைஞானந்தொழிலிவற்றுளாக்கினா
ரச்சமில்பரையுடனாக வாருயிர்க்
கச்சனாமவனிடையடைந்தொன்றாயினார். (௰௩)

மறைபெறுசிவமுளேமறைந்து நின்றபின்
குறையறவிளங்கியகோலும்போலுமாத்
திறமுறுதாமுமச்சிவத்துட்புக்கொளித்
தறிவுருவிளங்கினாரதீதவின்பமே. (௰௪)

இன்பமாமதீதமேலிருக்கும்வள்ளலா
ரன்பிலாருலகெலாமசத்துக்காட்சிவந்
தன்பினாலரனடியமுதமாந்தினா
ரென்பராலிவர்நலமியம்பொணாததே. (௧௫)

எறிந்தனர்முறிந்தவூசியினையேந்தலார்
செறிந்தனர்சிறைமுறிதெளிந்தநீரெனப்
பிறிந்தனரில்லறம் பெரியநூற்படி
நிறைந்தனர்துறவறநெறிகொணீர்மையே. (௰௬)

விடுத்தனர்வீடுநல்வீடுகூடுமா
றடுத்தனர்துணிவுகூர்துறவையேபெற
வடுத்தவூரம்பலமதனிற்புக்குளார்
நடத்துளானம்பல நண்ணும்வண்ணமே. (௰௭)

போந்தபின்சுற்றமும்புடையிற்சுற்றவேல்
வேந்தனும்பட்டினம்விளங்குமென்மையாற்
சேர்ந்தனன்மயக்கருத்தேற்றந்தேற்றினா
ராய்ந்திடினவுகாண்பரியவன்னவே. (௰௮)

மாயையின்போதமற்றிருக்குமன்னவர்க்
காயிரம்போதமங்காற்றினாரஃ
தேயினவல்லவாயிகழ்ந்தநெஞ்சினார்
தூயராவிருந்தனர்துளக்கமின்றியே. (௰௯)

பகர்ந்தனர்பட்டினப்பலரும் பண்பினான்
மிகுந்திருச்சேர்ந்தனார்விளம்புவீரெனப்

புகழ்ந்தவர்மவுனமாம் பொற்பின்வைகினார்
இகழ்ந்தமுகரைமொழிச்செல்வமாக்கினார். (௨௰)

மற்றவர்மவுனமுற்றுறைந்தவாய்மையா
லற்றைநான்றெவர்களுமகலவன்பரைப்
பெற்றபேறென்னையென்ற ரசன்பேசினா
னிற்கநீரிருக்கயாம்பெற்றநீர்மையே. (௨௧)

எனவிசைத்தன்பனாரியைந்தகாலையி
லனகவம்பலத்துளானடியர்மேன்மையை
நினையவுமரிதெனாநிருபன்கூறினான்
மனையறக்கினைஞரோவ்வழக்கம்பண்ணினார். (௨௨)

மன்னகேளிவர்பெருங்குடிமைவாழ்வுறத்
தன்னிகர்மருகனையிருத்தித்தாழ்வறப்
பன்னருந்திருவெலாம்பரிக்கச்செய்கவென்
றுன்னினருரைத்தலுமோகையாகியே. (௨௩)

அரசனுஞ்சுற்றமுமகன்றுபோயொளி
யிரவிநேர்மருகனையிவர்க்குநேரென
வரிசைசெய்திருத்தினார் மைந்தனாங்கினான்
புரையிலாவிழுதுவிட்டன்ன பொற்பினான். (௨௪)

இவன்சிறந்திருந்தூழி யெழுதுகற்பினா
ளவம்புனைமனைவியார் தாமுநாடொறுந்
தவம்புரிகுவனெனத்தனிவெண்காடருங்
கவன்றுகட்டறவழி காட்டியோட்டினார். (௨௫)

நங்கையாரிற்புக நடாத்திவிட்டபின்
மங்கலச்சேந்தனார்மனங்கனிந்துவீழ்ந்
தெங்களையகவெனவிறைஞ்சிப்பின்னரும்
பங்கயச்சேவடி பிடித்துப்பன்னுவார். (௨௬)

எனையுமீடேற்றுதலெந்தனான்றகொன்
மனையறம்புகுத வோமன்றுளாடலை
நினைவினிறுத்தவோநிகழ்த்துவீரென
வனையவர்கருத்தினுக்கமைந்தசெய்கென்றார். (௨௭)

பக்குவக்குறைவறுபண்பராதலா
லக்கணம்விடைகொளாவகன்றுதம்மகம்
புக்கனர்முக்கணன்புனிதவன்பரு
மிக்கஞானக்கிளைவிளைவின் வாழ்குவார். (உ௮)

தகவுநன்மனைவியாய் தனையராமவர்
மிகுமுயிராய்ச்சிவம் விரவுந்தொண்டரோ
புகு முறவாயுறப்பூமென்பாயலா
நகைமலர்ப்பள்ளி மேனயந்து நண்ணுநாள். (உ௯)

அங்கணின்றகன்றுபோயகங்கடோறும்புக்
கெங்கணுமயனென விரந்தருந்துவார்
பொங்கொளிவணிகர்தாம் பொருதுமானத்தாற்
றங்களூரனமிடற் றடைசெய்தார்களே. (௩0)

அடைவிலாவாலமிட்டப்பமெய்ப்பயங்
கொடுசமைத்துடன்பிறந்தவள்கொடு ந்திடக்
கடுவிடனடியவர் கடுகிவாங்கினர்
முடிபொருளறிகிலார் மூர்க்கமாக்களே. (௩௧)

வினையினைப்பிடித்தொன்றுவிளம்பியப்பரீண்
மனையின்மேற்சொருகினர் மனையின்மண்டழல்
துனைவிறப்பற்றவூர் துயர்கண்டன்னபோ
தனையவர்க்கிரங்கியாரெரியைமாற்றினர். (௩௨)

வேறு.

தங்களைக்கேட்டுப் பிறந்தில மென்னும் தடந்தமிழ்சாற்றினு ரதற்பின், பொங்கெரிபு குந்தவ்வூரெலாமுண்ணப் பூம்புகார்மாந் தர்களெவருஞ், செங்கனலவியாதிரங்கினூரதனுற் சிறியவரறிவி லாதவரென், றங்கியையவித்தார்பலபுரமெரித்தாரடியரோர் புரஞ் சுடலரிதோ. (௩௩)

பின்னருந்தமையே முன்னைநாட்கருதிப் பெறலருந்தவத்தி னுற்பெற்ற், வன்னையைக்குறித்துக்குடியிருந்துன் வீடனலிடுவே னெனவறைவா, ரின்னவாசகத்தாலென்கொலோவென்றென்றிர ங்குவார்நகருளோரெவரும், பன்னுமவ்வன்னையிறந்தநாள் வாக்கா லாக்கைதீப்பற்றிடப்பணிந்தார். (௩௪)

வேறு.

எண்ணும்பசுங்குடிபன்னீராயிரவருள்ளும்
நண்ணும்பிறருள்ளுநல்லோர்பலர்குழுமி
யண்ணலேயேகுதியோவாராவமுதேயெங்
கண்மணியேயென்றுக்கனிந்து கரைந்தழுதார். (௩௫)

ஆதித்தனேலாதவம்பரம்போலிந்நகரம்
பேதிக்குமென்னிலிஃதென்றும் பெரியோனே
நீதகற்றற்கையனே நீயெண்ணுந்திறம்போலுன்
பாதத்தையெண்ணிப்பணிகின்றோம்பண்ணவனே. (௩௬)

முன்னிச்சுடப்படுவாரில்லாத முப்புரங்கள்
வன்னிக்கிடுமவன்போன்மாதாவின்முப்புரங்க
டொன்மைச்சுடர்ஞானவங்கியினாற்சுட்டளித்தா
யின்னற்படுவோமுக் கின்னருளொன்றீந்தருளாய். (௩௭)

முத்துக்கொழித்து முழக்கெழுப்பு முன்னீருர்
கொத்துக்குடிப்பெரியோரிவ்வாறு கூறுதலும்
வைத்துப்படர்வாரை முன்போய்மறிப்பாரா
லுய்த்துத்திருவடிமேலொன்றுவணங்கினரால். (௩௮)

வேறு.

வணங்கினர்க்கருள் கூறொனுமுபதேசமறைப் பொருட்பாடவீந் திருத்திக், குணங்குறியறியப்படாததமாப்பொருள்கொ டுலாய வெண்காடிடைக்குறுகி, யிணங்கிடும்போதி லிறைவர் தங்கோயிலேயவர்தூயவர்யாருங், கணங்கொளவெதிர்ந்தார் வணங்கிடவணங்கிக்காமர்பூங்கோயிலுட்புகுந்தார். (௩௯)

அன்பினாலுருகியாதரம் பெருகியையனேயமுத வாரிதியே, யென்பொலாப்பிழைகள் பொறுத்தளித்தனையே யிளம்பிறைப்பவள வேணியனே, பொன்புனைபொருளே யென்றவைப்பொழுதிற் பூசுரர்மாணிக்கக்கந்தை, யின்புறக்கொடுத்தாரிறையவருடுத்தற்கென்றனபொன்செய்தாரிவரோ. (௪௰)

நாயினுக் காகாமணி யிரணியங்களையனுக்காகுமோவென்று, வாயினிற்புகலா முனமுதறினரான் மாணிக்கக்கந்தையாங்களைந்

தும், போயினநக்கனெனும்பெயர்புதுக்கிப்புணர்திசைத்திருவுடை யாடை, யாயினரனந்தவன்பருக்கின்பவருட் செல்வம்விளக்கினு ரன்றே. (௪௧)

அளக்கர் வெண்காட்டிலருட்டிருப்பொருந்தி யமர்ந்துலகறி வுறும் பொருட்டால், விளக்கினைவைய மூய்யவென்பாடல்விளம்பி னார் விளங்கியமேலோர், களக்கனிக்களத்தாரருட்பொருட்பிடித் தார் கரும்பினு மினியசெந்தமிழ்ப்பாத், துளக்கறப்பரவியுளக்கரு த்துருகித்துளிக்கணீர்மழைபொழிந்துறைந்தார். (௪௨)

ஒருவிடைகொடுபின் றமக்குவந்தளித்த வுத்தமருவப்புறுது றையுந், திருவிடைமருதைநோக்கி நின்றிறைஞ்சிச்சிறந்தகாவதம் பலகடந்து, மருவிடையரு தவாவியப்பதியிலெதிர்ந்தவர்வணங்கி டவணங்கி, யுருவிடைமருவு குருபரன்றிரு முன்னொருமையிற்பணி ந்துருகினரால். (௪௩)

உருகிநீரிடத்திற்பிறந்த வொண்கமலமொளிகொணீ ருதவிய தென்ன, பெருகுநீரருவியிருவிழிபொழியச் சிவக்கனிபிறங்கினின் றுடி, யுருவெலாம் புளகம் பரந்திடத்தெளிந்தவுளைதழுதழுத்தவு மொருவி, மருவினுரிறைதன்விடைகொடுமீண்டுவசித்தனரங்கண் மாதவத்தான். (௪௪)

முதல்வனைத்தெய்வத்தாமரை மூதலாமும்மணிக்கோவையா ற்றுதிப்பார், திதியவனாதி நிலைபரம்பரையாய்ச் சித்தசித்தறி வொடாதாரம், விதியுறவொன்று நிலைமுதலுரைத்தார் வியனிரண் டாய வாசரியத், ததிகனிற்பிடித்தாலன்றியுற்பவம்போகாதெனும ருமையும் புகன்றார். (௪௫)

மூன்றில்வன்றெண்டர்வாசவன் செல்வமுழுக்கடல் குளப் படியென்றார், மான்றருகரத்தானஞ்செழுத்தருங்காய் மருதமாணி க்கத்தீங்கனியென், றான்றினர் நான்கிலைந்தினிற் சகலமுற்றகேவ லத்திலெற்காணே, னென்றநின்கருணைஞான நாட்டத்தா னின் பெருந்தன்மையான்கண்டேன். (௪௬)

கண்டபினெனையுங் கண்டுளேனென்றார்கருதுமாறுவதிலொ ருவ, ஹண்டிவேண்டிருத்தல யினியின்குறை யோவுன்குறை யில்

லையென்குறையீ, தண்டனேயென்றார்வல்லுனர்வல்லாரம்பரந்தெறிந்தனர்நிலத்திற், கொண்டிடல்போலுன்னன்றுசெழுந்துரைப்போர்குறைவிலாரென்றனரெழிலார். (௪எ)

எட்டினிலடி சார்ந்தவர்க் கருட்செல்வ மிறைவரீயாதினுங்குறையா, திட்டவேயென்றுரென்பதிற்புத்தனெறிந்தகலெனாகுனொன்றார், பட்டவோபற்றிலென்செயலன்றிப்பரமனின் செயலினேனென்றார், முட்டிலிங்கிசைத்த திருவிசைப்பாவின் முடிவில் வெண்காடனென்றனரே. (௪அ)

இவைமுதற்றமிழாற்றுதிபல வியம்பியிருக்குமங்காடனிலொருநா, ணவைவிடாய்கழிக்கநீர் பொருதிருப்பனார்தம்பாணிதண்பாணி, யுவகையாலுதவுமின்றெனும்பாடலுரைத்தனர் மற்றுமோர்தினத்திற், கவலும்வல்விடத்தாலுறங்குறார்கட்டிக்கரும்பிடுகழியீர்ப்புண்டார். (௪௯)

இந்தவாநீர்ப்புண்டொருபுறத்திண்ணையிடங்கிடந்துறங்குறும் பொழுதி, லந்திவான்மதியம்வலம்புரிக்கண்ணியா மெனப்புனைமருதாளி, வந்துதன்னுடையூர் காப்பவன்போல வடிவுகொண்டிவர்மனஞ்சோதித், தந்துவான்கருணைபுரிகுவான்கருதியோயிரானள்ளிருளணைந்தான். (௫௰)

காரிரும்பொலிக் குந்தடிலெத்திடித்துக்காலிருன் மார்பிடைத்தாக்கி, யாரைநீயென்னவிஞரிவிடவெருவாவமுந வெண்காடருமிசைப்பா, ரூரிடையெவைக்குங் காவலுக்குரியோரயணர்ந்தியாதுரைக்குமாகேட்டி, சோரிபுன்மயிரின்றெலைகநோ டிறைப்பிதோலொடுமென்பு மூளைகளே. (௫௧)

ஈனமாமெண்ணிறத்துவக்குமாமோவின்னதென்றெண்ணையான்கானேன், யானலதொன்றையானெனநினையுமியூவெனதுன்னமென்றிசைத்தார், தேனலரிதழிச்சேவகப்பெருமான் றெரிந்திலர் மறைந்தனர்சிறந்த, ஞானெலாமுருகிப்பெருகுமன் பினராயுவகையங்கடலிடைப்படிந்தார். (௫௨)

படிந்தவரொழுந்து திசையினைநோக்கிப்பணிந்தனரணிந்தவெண்ணீற்றார், விடிந்தனவிருளுந் தாமரைச்சரணமெல்விரற்கொர்த

வோவென்பார், கடிந்தசொன்னடந்த கருணையைப்புகழ்வார்காற் சுவடுரத்தினிற்குறிப்பார், முடிந்தமாப்பொருளைமுடிவிலாவருளை முன்னினர்பன்னினரிருந்தார். (ருக)

அறுவகைச்சமயமிடைமருதாளியாறு மாமுகத்தினுந்தோன்றி மறுவறநடக்கும்புறநெறிச்சமயமற்றளவாறமாறுய புறநடைச்சமயப்புன்மைபற்பலவாம்பொருவிலம்மருகனைநோக்கி யுறவருமனைத்து மென்றனர்சமையாதீத முற்றிருப்பவரிவரோ. ()

இடைமருதாளிசமயபேதங்களின்னவாறிழைத்ததென்னெனின் முடிவிலாவுயிர்கள்பக்குவக்குறையான்மொழிகதியடைதரமவுன வடிவுறுமவர்கள்புகலிடமியம்பின்மாயைமாமாயையுளடங்கும் படியிலாவொன்றினின்றனரிவர்தம்பாக்கியம்யாவரோபகர்வார். ()

பிரிவில்சித்தாந்தர்சமயபேதங்கள்பேசியதெய்வமொன்றெனினு நிருபனுநிருபன்மைந்தரும்புந்தி நிகழ்தருமமைச்சருமாக்கம்[கரு பெருகுதந்திரும் ஞாளிகைக்கொள்ளும் பிள்ளைமாக்களுநிகர்ப முரிமையையுலகோரறிவுறப்பாடியுடையவனடிவிடாதுறைந்தார்.

அங்குறச்சிலநாளுறைந்தருவிடைபெற்ற ருட்குறிக்குடந்தை வாயடைந்து, சங்கரற்கன்பாற்றுதிபலவழங்கிச் சடைமுடியுடையவனிடங்க, ளெங்கணுமிறைஞ்சியந்தணரு ருமிறைஞ்சியங்கமரு நாட்களவாற், பொங்குகாமத்தாலிறந்தவாபார்த்துச் செயுளொரு வாய்க் கெனப்புகன்றார். (ருள)

அசையையாட்டயருங்கூத்தனைநோக்கியங்கு நின்றருள்விடை கொடுபோய், வசையுறுப்பாண்டிமண்டலம்புகுந்து வண்டமிழ்ம துரைமாநகரி, லிசையிறைபோற்றிமலைகொணுட்டுள்ளவிறைவனு லயங்களுமேத்தி, நசையிறுலாங்காங்கன்பினுலின்பநாதனூர்க்கரு ந்தமிழ்புனைந்தார். (ருஅ)

ஆலமுண்டவர்க்குத்தமிழமுதளிப்பா ரருள்விடைமருதில்வந் தடைந்து, பாலவெண்டிங்கட்பழைய வற்பணிந்துபற்பலகாலமங் கிருந்து, மேல்விடையவனைவிடைகொடுமீண்டு விரைந்து வெண் காட்டிடைப்புகுந்து, வாலியசூல கபாலியைநீலமாலினிவாமனைப் பணிந்தார். (ருக)

ஐயனைவணங்கி வழிபடுங்காலத்தகன்றிடுமெந்திரிச் சேந்தர், செய்யசேய்வந்திங்கிவ ரடிபணியச்சேருநீயாரெனச்சேந்தர், கையுறுதுணைய னென்றுபுன் ஞெழிலாற்கைதளைப் பட்டனன்றுதை, வெய்யகச்சிறைமீட்டருள்கெனப்பணிந்தான் விரைந்து வெண்காடருமெழுந்தார். (௬0)

எழுந்துபோந்தண்ணல் சன்னிதிப்புறத்திலிசைந்து மந்தனை தயிர்ப்பாடல், கொழுந்தெழப்பாடி முடித்திடக்கணங்கள் கொழும்புகழ்ச்சேந்தனைக்கொணர்ந்து, தொழுந்தகையவர்முன் காட்டிடவருளாற் றென்மைசால் சேந்தருந்தொழுது, விழுந்தெழுந்தாடிப்பாடினரரற்கு மெய்யன்பரிருவருமிவரே. (௬௧)

சேந்தர் வெண்காடரடியிணைபணிந்துதிருவுள மறிந்திடப்பணிந்தீ, ரேந்தவிச்சிறைமீட்டென்னுடற்சிறை மீட்டிடுநெறிகாட்டிடவேண்டும், வாய்ந்தநீரென்னவன்னவர் மகிழ்ந்து வனத்தினில் விறகொடித்தெடுத்திட், டாய்ந்தவவ்விற குவிற்றிடும்பொருளாலனந்தினமொருவருக்களிப்பீர். (௬௨)

எனுமுபதேசத்தவமளித்தகன்று ரிவருமத்தவம்புரி காலை, வனவயிற்பொதிசோறொருபுடைதூக்கி வாய்திறந்துறங்கிடவாயிற், கனியனம்பிதிர்ந்து வீழ்ந்திடவாயிற்பயந்துகன்மன்றனுக்கென்று, ரனகமன்றுடுமெங்கடம்பிரானுரமுது செய்தரும்பசியகன்றார். ()

பொருவிலக்காலத்தொருதிருவளவன்பூசனைகுறை வறப்புனைவான், பரவுமந்தத்திற்கோயிலாராச் சிப்பருமணிநாதமங்கெழும்பு, மருவுமன்றோசைகேட்டிலனயர்ந்துவருந்திறுன்கனவினிற்கூத்த, ருரைசெயச்சேந்தரன்பினையுணர்ந்திவ்வுல குளோரறியவாய்திறந்தான், (௬௪)

நீலநீர்வேலிஞாலமேலறிஞர் நிறைபரஞானிகளெவருஞ், சீலமாரன்பர்சேந்தனூர்க்கீந்த திருவருட்டிறத்தினைக்குறித்தா, ரோலுமன்னவர்தந்தவத்தினைத் துதித்தாரினியவெண்காடரைமதித்தார், பாலனம்புரியும் வளவனைப்பரவிப்பைம்பொனம்பலத்தையும்பணிந்தார். (௬௫)

திருவிசைப்பாவிற்றிருவிடைக்கழியிற்றிருச்சிற்றம்பலமுடையவரை, மருவமுன்வைத்த முருகவேடனக்குமாலுலாமனத்தமிழ்

பாழ், யுருகு மன்பினராமன்றுணின்றுடு மும்பர்தம்பதமலரடையக், கருணைசெய்தனர் வெண்காடராங்கதனுற் கதியடைந்திடவணித்தாருர். (சுரு)

வேறு.

தோணியம்புரத்துட்புக்குச் சுடர்விடுமழு மான்விட்டுக்
கோணறநிற்குமின்பக்குழகனையழகுபூத்து
மாணுறுதோளியாணி மணியணிப்பச்சையாடுங்
காணுறுங்குரவர்ப்போற்றிக்கண்டுகண்களிக்கலுற்றுர். (சுஎ)

கருங்கடற்றோணிவிட்டுக்கட்டுமட்டுடைமாணுக்கர்
பெருங்கடற்றோணிவிட்டபெரியதங்குரவற்போற்றி
யொருங்கடற்கோலுநீலமொருமூன்றுமுடைந்துமாற
வருங்கடற்கண்டநாடுமெகிழ்தமிழ்பாடுநாளில். (சுஅ)

பண்டினுமதிகசத்திபாதம்வந்தடைதலாலே
யொண்டிறற்றிருவெண்காடருடற்கலத்துயிர்ச் சரக்கைக்
கொண்டிடத்தில்லைக்கூத்தர்குறியருணற்றுர்பூட்டி
யெண்டிகழ்சிவந்தபாதத்திருங்கரைசேரச் செய்வார். (சுகூ)

ஆதலாற்காழிவாழுமமுதனைவழிபட்டேத்திக்
கோதுதீர்குரவற்போற்றிக்குறிபற்றி விடைபெற்றண்ணல்
மாதவம்பெற்றோர்போற்றுமன்றுண்மாணிக்கம்பெற்றே
யேதமிலின்பாதீதவிலாபமுற்றிருக்கவந்தார். (எ0)

வந்தவர்மற்றுமுள்ளதலங்களும் வழிபாடாற்றிக்
கொந்தலர்ச்சிறைவண்டார்க்குங்கொள்ளிடப்பொன்னிபின்னிட்
டந்தளிர்ச்சோலைவேலியண்ணலூர்கண்டுங்கேட்டுஞ்
செந்தமிழ்திருவாக்காளர் திளைத்துளங்களித்துவந்தார். (எக)

கொள்ளைவெண்கமலக்காடுங் குளிர்செந்தாமரைக்குழாமு
மள்ளலங்கழனிதோறுமனந்தகோடிகள்வண்டில்லை
வள்ளறுடங்கண்டுள்ளவாணிலாவண்ணப்பானு
தள்ளறத்தலவாசஞ்செய்தன்மைபோன்றனவுங்கண்டார். (எ௨)

தில்லைமாநகரஞ்சுற்றுந்திருமதிற்சிகரிநான்கும்
நல்லவர்மௌனப்பொற்பும் ஞாயிறுதோன்றிற்றென்று

வெல்லொளிநிமிரும்வெற்புமிமையமும்பொதியிலும்போன்
சொல்லுவகண்டார்தாண்டு முவகையாரு ருட்புக்கார். (எங)

வீதிகடொறும்பணிந்துவிதிமுறையந்தணாள
ராதிமூவாயிரத்தோரங்கிகளனேகஞ்சுற்ற
மீதிடாநிற்கு ஞானவங்கியைவியந்து காண்பான்
பேதமைதீருந்தீரப்பெரியவரரிதின்வந்தார். (எச)

வேறு.

நீடுமறையாகமவிரப்பியபெருஞ்சொல்
லாடியவிதிப்படியமைந்தசதுவீதி
நாடுமதிலேர்தணவமாகநவமாகுந்
தேடரியவீடுதரு தெய்வநகர்கண்டார். (எரு)

கண்டனர்வணங்கினர் கணங்கொள விணங்குந்
தொண்டரொடுமுட்சிகரி சூழ்ந்தமதில்வாயி
லெண்டரவிறைஞ்சியுட் புகுந்தனரிலங்கு
மண்டர்நடமாடுமணியாலயமருங்கே. (எசு)

ஆலயமிலங்குவததிந்தனர்செறிந்தே
ஞாலநடுவிண்ணுயர்வுபாதலநலக்கீ
ழேலுமிதுவென்பதுவுமின்பமொடுகண்டா
ராலமணிகண்டரருள்செய்யிலரிதென்னே. (எஎ)

ஏடவிழ்செழுங்கமலமெங்கணுமிலங்கப்
பாடுமளியாடுமவர்பாவமெனவோவத்
தேடுநருளேயநிலேசேருமவர்நேச
நீடுசிவகங்கையினெடுந்தவர்படிந்தார். (எஅ)

படிந்துசிவமாமிதெனவோர்ந்துபடர்பாவம்
விடிந்துசிவமூலமுறைமேதகையசோதி
முடிந்தபொருளாய் முடிவிலாதபொருள்கண்டார்
தடிந்திருள்கடிந்தபொருடக்கசபைபுக்கார். (எகூ)

சற்றுமசையாதபொருடானசையமூல
முற்றநிலையுந்தலைமையுற்றபடிமற்றும்

பெற்றபடிகொற்றவர்பிறங்குசெயல் கண்டா
ரற்றமறியானருளளிக்கிலரிதென்னே. (௮௰)

தஞ்சமலேமஞ்சர்பலகாலரற்றிமூல
நெஞ்சுதல்படாவிடயயோகிபுலிபாம்பு
நஞ்சமுறுதேசிகநடக்கலவிகண்டா
ரஞ்சலிசெயின்னவருமன்னவரையொத்தார். (௮௧)

அந்தநடுவாதிவிடு மண்ணலவையுண்டாய்
வந்துதிசயத்தினைவழுத்தினர்தநெஞ்சில்
முந்துறவிளைந்ததொரு மூத்திவிசயத்தைச்
சிந்தைசெய்திருந்தனர்திருந்தினர்வருந்தார். (௮௨)

செங்குருநடந்தரிசனஞ் செய்சமயத்தில்
வெங்ககனலிங்கவுருமேல்விளைதல்பெற்றார்
அங்கையினிலங்கியவனுடலிசைபாட
லங்கிசையவோதினரருந்திருவிசைப்பா. (௮௩)

வேறு.

பொன்னுருமணிமார்பன்பூமேலயனறியா
வென்னுவெடுத்தோதியேவிடைபெற்றேகியபின்
பன்னுகவாடகப்பொற்பாதமெனப்பாடியிடச்
சென்னுவுண்சோறளித்தாள் சிவகாமசுந்தரியே. (௮௪)

ஞாலமறியவெங்கணுயகியாரீந்தவன்னக்
கோலவருளுண்டுகுலாப்பெருகிக்கூத்தாடி
மூலவிலிங்கமமர்முழுச்சுடர்பின்னுந்தொழுது
சாலமகிழ்ந்துதருக்கினுர்தண்டமிழார். (௮௫)

பேசிக்கடைதொறும்போய்ப்பிச்சைகொண்டிங்குண்டிருத்த
வாசிக்களிப்புடைத்தாம்வண்ணமெனத்தண்ணளியார் [ல்
தேசுற்றிருந்தார்சிலகாலஞ்செந்தமிழாற்
பூசிக்கப்பெற்றார்புனிதனடித்தாமரையே. (௮௬)

வான்றேடுமறையேயோவென்றெடுத்துவண்டமிழ்ப்பா
நான்றேடநானுரோ நானுரோவெனமுடித்தார்
தோன்றுப்பொதுச்சூழ்ந்து சோதிவிடைபெற்றேகி
யேன்றார்வடதிக்கிடைநடக்க வன்பாளர். (௮௭)

வேறு.

ஏயும்பூகமிளநாகமினியகனிசூழ்பனைமரங்கள்
காயும்போதுங்கலந் தளிப்பக்கனையார்புனல்சேர்தினைநகர்வாய்த்
தாயுந்தமருந்துறந்தவர்தாந் தம்பிரானூர்தாம் வரக்கண்
டாயும்பெரியோருள முருகியருகாவின்பம்பெருகினரால். (௮)

விடைகொண்டகன்றுசிவாலயங்கள் விரவிப்பரவியடிபோற்றி
மடைகொண்டுடையும்புனற்கேடின்மணிநீர்வாவிமலரோடைப்
புடைகொண்டொருபாதிரித்தருவிற்புணர்சண்பகமும்பலபூவு
மடையுந்திருப்பாதிரிப்புலியூரடைந்தாருடைந்தமனமுடையார்.()

அரக்கரனையார்விடுதூணையலைவாய்த்துரும்பினெளிதாக்கி
யரக்குமந்தக்கற்கலத்தாலொருமாதவனைக்கரையேற்றிப்
பரக்குங்கடல்வாய்மரக்கலந்தாழ்ப்படுத்தித்தமையுங்கரையேற்று
மிரக்கம்பெரியோர்தமைக்காணவிளநீர்க்கெடிலம்படிந்தாடி.(௧௰)

கடற்பாற்றிகழ்ந்தசடைஞாழற்கன்னிவனத்தெம்பெருமானை
யடற்பாலினிமேலுறவறியாருலவாச்செல்வம்பெறப்பணிந்து
மடற்பாற்கமலம்வழிபிரசம்வாவிச்செழுநீர் மேன்மிதந்து
விடற்பாலனவாந் திருவதிகைவியன்மாநகரத்தயல் போந்தார். ()

கூற்றுயினவாறென்றெடுத்துக் கொழுத்ததமிழான்வழுத்துமவர்க்
காற்றுவின்பந்திருநாவுக்கரசென்றளித்தாரொளித்தாள்கள்
போற்றுவணங்கிமணங்கமழும்பொற்பூவனையதமிழ்ப்பனுவ
லேற்றுநின்றூர்மரகதவீரொட்டானத்தெம்மிறைவனையே. (௧௨)

இறைவாழ்மூலவிலிங்கவடியிறைஞ்சிப்போந்தங்கிடைஞாழன்
மறையார்சோலைத்திருவெண்ணைநல்லூருடையவிடையானை
யுறவாடினர்தாமுறவாடியொன்றுமிருடீர்ந்தருள்பெற்றூர்
பிறையார்மின்னற்பின்னலராப்பேணிப்பணிந்தார்பெரியோரே. ()

சோலைகாட்டுங்கரைப்பெண்ணைத்துறையார்மறையார்சுந்தரனை
மாலைகாட்டுந்தமையிமையோர்மகிழ்ந்துகாணமுழிபூசி
யோலைகாட்டியாண்டாரையோவாவிடைபெற்றேகையினு
லாலைகாட்டும்பெருந்துழனியண்ணாமலையைநண்ணுவரால். (௧௪)

நெடுந்தூரத்தேவன்னிமலைநிலையைநோக்கிப்பணிந்தெழுந்து
தடந்தாமரைத்தாணிணைந்துருகிச்சந்தம்பெருகுந்தமிழ்வாயார்
நடந்தாரந்தொண்டர்ப தநளினம்புளகம்பெறப்போற்றி
வடந்தாழ்முலையாளொனுங்கொழும்பால்வாரிமுழங்குமவ்வூர். (௯௫)

ஊருட்புகுந்துவீதிதொழுமுள்ளங்குளிரவொளிவளரப்
பாருட்பணிந்துதிணிந்தமதிற்பயில்கோபுரவாயிலும்பணிந்து
வேருட்பழுத்தமலர்க்கனியைவிண்ணோட்டமுதைத்தண்ணளிகூர்
வாருற்றுண்ணாமுலையாளைமலைசூழ்போந்துவணங்கினரால். (௯௬)

தாழாக்கருணை விடைகொடுபோய்த் தருக்கிப்பெருக்காற்றெழுந
வாழாநின்றதிருவிசைப்பாவள்ளலுள்ளங்கரைந்துருகிப் [தென
பாழாய்ப்பயிலாத்தொழிலாற்றும்பரனாலயங்கள்பலபோற்றிச்
சூழாவருவாரிடைமருதிற்றேன்றுங்குருவையொருவாதார். (௯௭)

மற்றுமபதிகளாங்காங்குவணங்கிக்குணங்கொண்டணிந்த
சுற்றுஞ்சடையார்க்கினியதமிழ்த்தொடைமாலைகளும்பலசாத்தி
யெற்றும்புனலும்பெரியோருமிளம்பூவையரும்வளம்பூத்துக்
கொற்றந்தரும்வேதாகமமுங்குழுமுங்காஞ்சிநகர்புகுவார். (௯௮)

வேறு.

மாயவளப்பொருடேடமாநீரிற்போய்வருவார்
நேயவளப்பொருடேடநீணிலத்தின்மேற்படர்வார்
தூயவனப்பெரியோர்வாழ்தொண்டைமண்டலத்துத்
தாயவளெப்போதுமுறைதண்காஞ்சித்தலத்தணைந்தார். (௯௯)

கச்சியாந்தலநலத்தைக் கண்டிரண்டுகைகூப்பி
யுச்சிவாளிளம்பளிங்கையொத்துவளருத்தமனார்
நச்சியாரணம்பாடி நாடியநற்றவங்காட்டும்
பச்சைநாயகிசிவந்த பாதநினைந்துட்புகுவார். (௧00)

மெய்காட்டியாண்டருளும் வித்தகர்மாவடித்தேவர்
கைகாட்டுந்தொண்டரெலாங் காவிரிப்பூம்பட்டினத்து
ஐகாட்டும்பெரியோர்வந் தடைகின்று வொன்றடைந்தார்
மொய்காட்டுமிவரவர்கண் முன்பணிந்தாரன்பாளர். (௧0௧)

மாடநெடும்பொன்வீதிவண்ணமெலாங்கண்ணுவப்ப
நீடியசீரார்பணிந்து நீர்மழைகண்ணூற்பொழிந்து
கோடலுருவாக்காற்குணம்பாய்கொழுந்தமிழ்கள்
பாடினார்நாடிப்பரநாதன்முன்பணிந்தார். (௧0௨)

ஒன்றாகநின்றருகி யோங்காரநீங்காம
னின்றாலேயென்றன்பினின் கோலமாயிருப்பக்
குன்றாவாமளிப்பாயென்றார்குறைவறியார்
வென்றாளுமம்பிகைவாழ்மெய்க்கோயில் புக்கனரால். (௧0௩)

வேறு.

ஆருயிராமவையார்பெறுவீடுற
வாரிலாவியமாதவன்மாதவள்
சீருறைவாள்விழிசீருறைவானரு
ளேருறவேருறவேயிவர்நின்றார். (௧0௪)

செங்கழுநீர்மலர்முன்றொருதீப
மங்கலர்நான்கொருநான்கெரிதீப
மெங்களுமைக்கெனலாமிவையாவுஞ்
சங்கரனன்பர்தருக்கொடுகண்டார். (௧0௫)

தாயவணின்றுதவம்புரி காலைக்
கோயில்குலாநதிகொண்டமைகண்டார்
நாயகன்மேனிநலஞ்செய்தழும்பை
யேயவர்நாத்தழும்பேறமொழிந்தார். (௧0௬)

கச்சிநகர்க்கடலக்கடற்றோன்றும்
பச்சமுதப்பணையைப்பணிவுற்றார்
மைச்செறிகட்கடைவைத்தருள்வைத்தா
லிச்சிறுமைக்கடல்வற்றிடுமென்றார். (௧0௭)

என்றவணங்கிவலங்கொடிணங்கிக்
குன்றில்விளைந்தகொழுங்கனியுட்கொண்
டென்றுமிருங்களியின்பநிரம்ப
மன்றினடந்தொழவந்தவர்வந்தார். (௧0௮)

வேறு.

திருவேகம்பமுடையார்க்குத் திகழ்ந்தந்தாதியொருமாலை, மி
ருபான்மெய்த்தொண்டெனவெடுத்தாரியற்றொண்டறியேன்கைத்
தொண்டு, புரிவாரதனிற் காற்றொண்டுபுரியே னுண்பான்பொய்த்
தொண்டாய், வருவேனென்றார் மெய்நாட்டோர் நகைக்கவெனு
மாலையுமிசைத்தார். (௧௦௧)

இசைத்தங்கிருப்பாரோரிரவிலெரிவந்துதாய்புகுந்தாற்போ
லொசிக்கும்பசிவந்தெழவயிறேயூருண்டுறங்கனடந்தனகாண்
வசிக்குமவர்களனம்பகிராரளியாயென்றுலழுத்திடவும்
பசிக்குந்தரமேலிடவிளக்குப்படுவீடொன்றிற்படர்ந்தனரால். ()

காயும்பசியாலருட்பெரியோர்கங்குல்யாமத்தெளியராய்
வாயுந்திறவாரங்கைகொட்டமனைவாழ்பவன்சற்றறியாம
லாயுங்காமக்கள்ளனெனவந்தோவந்தோதீங்கிழைப்பத்
தீயோன்செயலையறிந்தங்கணயலானொருவன்றெரிந்தணைந்தான் )

போற்றும்பெரியோரிவர்தமைநீபுடைத்தல்பொல்லாதெனவதனை
மாற்றிக்கொடுபோயுடற்றடவிமகிழ்பாலன்னங்கறிநறுநெய் [ல்
கோற்றேனிவைகள்கலந்தூட்டிக்குளிர்சாந்தணிந்து பணிந்துசெய
சாற்றியிடநீரவரவர்க்குத்தக்கதடைந்தீரொன்றார்பின். (௧௧௨)

பிரியாவரனைவிடைகொடுபோய்ப்பெருங்காளத்திமலைநோக்கி
வரியார்சுரும்பர்வரியிசைக்குமலர்க்காவாலங்காட்டம்மைக்
குரியார்வணங்கிமணங்கமழுமுயர்பூங்கானநெடுஞ்சாரற்[தார். ()
பெரியோர்தவங்கள் புரிவனவுங்காண்பான் கருதிப்பெயர்ந்தணைந்

தொண்டர்திரண்டோடிப்பணிந்து தொழுதுவீதிச்சினகரத்தைக்
கண்டுவணங்கிக்கரங்கூப்பிக்கள்ளங்கொள்ளாவுள்த்தார்
மண்டும்பேரன்பெனவறியாவண்ணம்பயிலுங்கண்ணப்பர்
பண்டைப்பணியைநினைந்துருகிப்பல்காலொல்கிப் பணிந்தனரால்.

பணிந்துதிருக்காளத்திமலைப்பரஞ்சோதியையும்பணிந்துபணிந்
தணிந்துபரஞ்சோதித்திருநின்றன்பென்புருகுமின்பாளர்
திணிந்தபடிவக்கொடுமுடிகடிசைகடோறுமிசையுமலைவ
துணிந்துகருணைத்திறம்பெறுவார்சூழப்போந்தார்வாழ்வுறவே. ()

போதும்போதின்மணிநகரம்புடையிலாடலிசைநோக்கி
நாதர்க்கிடுதண்டிடைத்திபநணியவாருங்கதிக்காளற்
கேதமில்லாவுறவேயோவென்பார்முன்போம்பலயானை
சீதமதியோன்விழாவினுக்குத்திருமுன்படரப்போவென்பார். ()

ஐயன்றிருமேனியினடங்குமத்தியுறவோவெனநிலைவா [த
ரெய்யுஞ்சிலைவேட்டுவர்திண்ணர்க்கென்னுமுறவோபண்ணைமந்
செய்யகனிவாய்க்குறமளிர்சிவஞ்சேர்கன்னிமார்நேர்வார்
தூய்யசீரர்தமிழிசையோர்சுரும்பின்பாடலாமென்பார். (௧௧௭)

தவமாற்றுமலாற்றுமவர் தம்மைச்சிவகோசரியாரொன்
றுவமானத்தாவினைந்துருகியொளிகூர்தென்றிசைக்கயிலைத்
தவமாமலையைச்சூழ்போந்துதொடர்ந்துபடர்ந்தத்தவத்தவரோ
டவமாறியலாக்கதியளிக்குமையன்றிருமுன்னடைந்தனரால். ()

குளிர்கூரருவித்தென்கயிலைக்கோமாற்கில்லுமெனப்பாடி [ய்த்
யொளியார்திருமுன்விடைகொடுபோயொற்றியூர் கைப்பற்றினரா
தளியாலயங்கள்பலபோற்றித்தண்டாமரைக்காட்டொடுமாட
வெளிமாமலைகள்கலைஞானவேலைநிலவப்பதிபோந்தார். (௧௧௯)

அடியார்திரளவ்வயினோக்கியடிகளடித்தாமரைபோற்றி
விடியாவிருளைவிடிவிக்கும்வீதிமதிற்கோபுரம்பணிந்து
பொடியாடியவொண்டிருமேனிப்புனிதனுனதுப்புகழ்பாடி
நடியாநிற்குநாதர்தஞானப்பொருளைநணுகினரால். (௧௨௰)

குருவாய்வந்தென்குறைதீர்த்தருள்றேருன்றக்கொழுமணியே
பெருவாழ்வாகியெனைக்கலந்துபிரியாதிருக்கும்பெருந்தேனே
யுருவாயருவாயுருவருவாயுனையாடியமூன்றையுமொருவி
வருவாய்தருவாயென்னுயிர்வாய்மருவாய்மருவாய்மருவாயே. ()

போற்றிபோற்றிநாயேனைப்பொருளாய்க்கொண்டவருள்போற்றி
யாற்றின்வலிகூர்முகங்கோடியடக்குஞ்சடையாயடிபோற்றி
தேற்றியினியாயினுமுனைப்போற்செய்வாய்மெய்வா யருள்போற்றி
நீற்றினுள்ளேபவளவொளிநிகழுந்திகழ்வேயருள்போற்றி. (௧௨௨)

என்றென்றருளின்றிறம்போற்றியெள்ளாவுள்ளங்கனிந்திளைப்ப
மன்றுளாடியெமக்கருளுமணிமாணிக்கப்பநம்பணிந்து

நின்றுபோந்துவலஞ்சூழ்ந்துநிகழ்ந்துமகிழ்ந்தங்கிருக்கின்றார்
தென்றல்வந்துசுந்தரரைத்திருவாரூருக்கழைத்தனூர். (கஉங)

மயனாலயனாலியற்றாதமணிச்சங்கிலிக்குத்தூதுபோய்
வியனுமிருகானடந்தார்க்குவிருந்தாய்வந்தவெண்காடர்
கயனாணியகட்கணிகையர்காற்கமலச்சிலம்பிறைலிமலியும்
பயனாரொற்றியூர்பற்றிப்பதிகொண்டிருந்தார்படிபோற்ற. (கஉச)

வேறு.

இருநிலமடந்தையென்னவெடுத்தவாசிரியச்செய்யு
ளொருபதுமொன்றுமொற்றியூர்த்தொகையெனப்பேரிட்ட
திருவிசைப்பாவாற்பாடித்தெளியொளியுளம்விளங்கப்
பெருநிலையுடையாரின்பப்பேறெலாம்பெற்றுளாரோ. (கஉரு)

பெற்றவர்திருநீராடித்திருநீற்றின்பெற்றிமுற்றுங்
கற்றவர்புரங்கண்மூன்றுங்கற்றவர்கருத்துட்கொண்டு
செற்றவரடிகள்பாடித்தினந்தொறுநியமமாற்ற
லுற்றனருற்றவாற்றினுண்மையிங்கியம்பலுற்றேன். (கஉசா)

நம்பிடைமருதநாதனற்குருவாகிவந்து
தம்பொருடனக்குத்தந்ததண்ணளிப்பெருமையாலே
யம்பொனஞ்செழுத்தினாலுமருநியமங்கள்செய்வார்
சம்புவையொழியாப்பூசைத்தன்மையுமவற்றாற்செய்வார். (கஉஎ)

கிளர்ந்தகெற்பத்தினுள்ளுங்கெற்பகோளகையிடத்துங்
கொளுங்கெற்பநிலையத்துள்ளுங்கேவலஞ்சகலங்கூர
வளர்ந்தறிசகலந்தாமேயதீதம்போன்றதீதமன்றும்
வளங்களுங்கண்டுநீங்கிமண்டொளிகொண்டுநிற்பார். (கஉஅ)

அவத்தைகடணந்தவன்றியையனுக்காக்கையாக்கிச்
சிவத்தொழிலொவ்வெழுத்தாற் சிவலிங்கவடிவமாகிப்
பவப்பெரும்பிணிதணிப்பார்பரவுயிர்தமக்குளாக்கி
யவர்க்குளவுடலந்தாமேயாயினரொற்றியூரர். (கஉக)

அவருயிர்தமக்கில்லாக்கியாண்டவாண்டகையார்நிற்ப
வுவரிவாய்மணற்பரப்பிலொளிவெளியிடத்திற்போந்து

கவலுறுச்சிறார்கள் சூழக்கண்டவர்தன்மையாகிப்
பவர்விளையாடலோடும்பாடலும்பயிலலுற்றார். (௧௱௰)

குறுமகாரணிக்குழாங்கள்குளிர்மணப்புளினப்பாங்க
ருறுதிமெய்தளர்ந்துபின்னரொன்றும்வெண்காட்டர்தம்மை
மறுதாம்புதைத்துத்தொக்கவப்புறம்பாராநிற்பார்
மறுகுழிப்படுத்தபின்னு மன்னவர்விலகிநிற்பார். (௧௱௧)

பன்முறையித்தன்மைத்தாம்படிபடிமணலிற்காட்டி
முன்னியபட்டினத்துமுளைத்தவவடிவந்தானே
சென்னெறியிலிங்கமாகிச்செழுமணறனின்முளைத்தார்
புன்னெறிச்சிறார்களோடிப்புரத்துளார்க்குரைத்தாரன்றே (௧௱௨)

ஒற்றியூருழியுள்ளாருமற்றுளபுரியுளாரும்
பற்றியூர்ந்தடைந்துகண்டார்பட்டினக்கடவுளாரை
வெற்றியூர்மூன்றுஞ்செற்றவிமலரோயிவராமென்றார்
பெற்றியூரதிசயத்தின்பெருமையாருரைசெய்வாரே. (௧௱௩)

மலர்மழைபொழிந்தவெங்கும்வானதுந்துமிமுழங்க
நலமலிகணங்கள்சூழநாகநாட்டரம்பைமார்கள்
பலநடம்பயிலப்பூவிற்பாவையாரடியர்பாட
விலகியவிதழிமாலையீசனுக்கணிந்தாரன்றே. (௧௱௪)

புகுவார்வார்த்தைநாத்தகவாப்புவனத்துள்ளுமந்தரத்து
மகிழுந்தேவருலகுள்ளுமணிநீர்வேலிஞாலத்துந்
தகுவோர்கேளாவிவர்பேறுந்தமக்குவருமோவெனக்களித்தார்
நகையானிலப்புரமூன்றுமெரித்தார்பெருமைசொல்வார்யார் (௧௱௫)

திருவம்பலமேமுதலாயசிவத்தானங்கள்பணிந்தனவு
மருவும்பொழுதுதிருவிசைப்பாவமுத்துந்திறமுமொற்றியூ
ரருளின்றிறத்தாற்சிவலிங்கமானவாறும்பூம்புகார்
விரவுங்குலத்தாரறிந்தோகை வெள்ளத்தழுந்தாமிதந்தெழுந்தார்.

அழுவார்தொழுவார்சென்னியின்மேலங்கைத்தலவஞ்சலி மு
கிழ்ப்பார்,வழுவாநமதுகுலத்தெய்வம்வருமோகாணவினியென்பா
ர், முழுவாண்மதியிங் கெழுந்தருளப்பெறு மோவென்னமொழிகி
ன்றார், பொழுதோடிவண்விட் டவ்விடம்போய்ப்பணிவோமென்
பார்புண்ணியரே. (௧௱௭)

சொன்னவண்ணங்கிளைகளொடுந்துழனியார்ப்பவப்பதியோ
ரன்னபெரியோர்போனநெறியவனிதலமேற்பலர்படர்வா
ரின்னவாற்றாலொற்றியூரிடத்திலடைந்தார்சிவபெருமான்
றன்னைப்பணிந்திச்சிவபெருமான்றனையும்பணியாநிற்கின்றார்.

போற்றிபோற்றிநின்னிரண்டுபூமென்கமலபதம்போற்றி
தேற்றமருவும்பரநாதச்சிலம்புபோற்றிநலம்பயிலன்
பேற்றவரியபுலியதளின்மருங்குல்போற்றிநெருங்கரவந்
தோற்றுமுதரபந்தமுந்திச்சுழியும்போற்றியெழில்போற்றி. ()

புரிநூன்மார்பும்வெண்ணீறும்புயமீரைந்தும்புடைபோற்றி
வரியாரரவம்வச்சிரம்வாண்மழுவோடயம்வலம்போற்றி
யரவார்பாசக்கயிறுமணியனலங்குசத்தோளிடம்போற்றி
கரவாதிருக்குந்திருநீலகண்டம்போற்றியொளிபோற்றி (௧௪௦)

நடுவுகுணபாற்றென்றிக்குநடக்கும்வடக்குக்கிழக்கிவற்றி
னடைவுபடிகம்பொன்கருமையாத்தம்பாலாறுமுகம்போற்றி
முடிவிலாதமுகங்கடோறுமுக்கட்கமலபதம்போற்றி
சடையுமுடியும்பொன்னிதழித்தாமத்தொடையுந்தனிபோற்றி.

சிவமொன்றாயச்சதாசிவமைந்தாகித்தெளிவுகூர்வோர்க்குப்
பவமாற்றவருமகேசமெனப்பரவுமுருவத்தைந்தாகி
யவமாற்றியமெய்க்கடவுளுடனாகும்பொருளேயடிபோற்றி
கவலாதெம்மைக்காக்கவருங்கருணாநிதியேயடிபோற்றி (௧௪௨)

என்றுபோற்றிமாபூசையியற்றிப்பணிகள்பலபுரிந்து
மன்றல்கமழுமவ்வூரில்வசித்தார்சிலவரிவர்க்காக
நன்றிபெருகுமிஞ்சியிசைநகரமதனினிதமர்ந்தார்
குன்றாச்செல்வமிருமைக்கும்பெற்றார்சற்றுங்குறைவிலரோ. ()

அருளுமிலிங்கமானவன்பர்தங்காதைகேட்போர்க்
கிருளறுஞ்செல்வமல்குமென்றுநன்னலங்கணண்ணும்
பெருமையுமறிவுமென்றும்பிறங்கியகதியுமாகுந்
திருமகள்கலைமகள்கைசேர்வதுந்திண்ணமாமே. (௧௪௪)

பட்டணத்துப்பிள்ளையார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

## திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாந்திருமுறையுள்

திருவெண்காடனென்னும்

பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

முதலாவது

# கோயில் நான்மணிமாலை.

திருச்சிற்றம்பலம்.

வெண்பா.

பூமேலயனறியா மோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம் - பாமேவு
மேத்து கந்தான் றில்லை யிடத்துகந்தா னம்பலத்தே
கூத்து கந்தான் கொற்றக் குடை. (௧)

(கலித்துறை.)

குடைகொண்டிவ் வையமெலாங் குளிர்வித்தெரிபொற்றிகிரிப் படைகொண்டிகறெறும் பார்த்திவராவதிற் பைம்பொற் கொன்றைத், தொடைகொண்டவார்சடை யம்பலத்தான்றொண்டர்க் கேவல் செய்து, கடைகொண்டபிச்சைகொண் டுண்டிங்குவாழ்தல் களிப் புடைத்தே. (௨)

(கழிநெடில்விருத்தம்.)

களிவந்தமுதூறிக் கன்மனத்தை யெல்லாங்
கசியும்படிசெய்துகண்டறிவாரில்லா
வெளிவந்தடியேன்மனம்புகுந்ததென்றால்
விரிசடையும்வெண்ணீறுஞ் செவ்வானமென்ன
வொளிவந்தபொன்னிறமுந்தொன்னடமுங்காட்டு
முடையானுயர்தில்லையம்பலமொன்றல்லா
லெளிவந்தினிப்பிறர்பாற் சென்றவர்க்குப்பொய்கொண்
டிடைமிடைந்தபுன்மொழியா லிச்சையுரையோமே. (௩)

(இணைக்குறளாசிரியப்பா.)

உரையின்வரையும்பொருளினளவு
மிருவகைப்பட்டவெல்லையுங்கடந்து
தம்மைமறந்துநின்னைநினைப்பவர்
செம்மைமனத்தினுந்தில்லைமன்றினுங்

மாடுமம்பலவாணநீடு
குன்றக்கோமான்றன்றிருப்பாவையை
நீலமேனிமாதிருத்தங்கையைத்
திருமணம்புணர்ந்தஞான்றுபெருமநின்
றுதவிழ்கொன்றைத்தாருமேதமில்
வீரவெள்விடைக்கொடியும்போரிற்
றழங்குந்தமருகப் பறையுமுழங்கொலித்
தெய்வக்கங்கையாறும்பொய்தீர்
* விளையாக்கலியெனுமாணையுநிரைநிரை
யாயிரம்வகுத்தமாயிருமருப்பின்
வெண்ணிறச்செங்கண்வேழமும்பண்ணியல்
வைதிகப்புரவியும்வானநாடு
மையறுகனகமேருமால்வரையுஞ்
செய்வயற்றில்லையாகியதொல்பெரும்
பதியுமென்
றொருபதிளுயிரந்திருநெடுநாமமு
முரிமையிற்பாடித்திருமணப்பந்தரு
ளமரர்முன்புகுந்தறுகுசாத்திநின்
றமர்பெயரொழுதியவரிநெடும்புத்தகத்
தென்னையுமெழுதவேண்டுவனின்னரு
ளாணைவைப்பிற்காஞ்ஞைவனுவும்
வானுறநிமிர்ந்துகாட்டுங்
கானில்வானுளம்புங்கருடனுதலினே.

(வெண்பா.)

ஆதரித்தமாலுமறிந்திலனென்றஃதறிந்தே
காதலித்தநாயேற்குங்காட்டுமே - போதகத்தோற்
கம்பலத்தானீணுககங்கணத்தான்றெண்புலியூ
ரம்பலத்தான்செம்பொனடி. (ரு)

(கலித்துறை.)

அடியொன்றுபாதலமேழிற்குமப்புறம்பட்டதின்பான்
முடியொன்றிவ்வண்டங்களெல்லாங்கடந்தநுமுற்றும்வெள்ளைப்
பொடியொன்றுதோளெட்டுத்திக்கின்புறத்தனபூங்கரும்பின்
செடியொன்றுதில்லைச்சிற்றம்பலத்தான்றன்றிருநடமே. (சா)

* கலியென்பதனை விகுதிகுன்றிய முதனிலைத்தொழிற்பெயராக்கிப் பொய்தீர்விளையாக்கலியென்பதனுக்கு வேதம், என்றுபொருள்கொள்க. அதுவேயவனதாணையாதலை "வேதந்தானேநமதாணைச்சத்திவடிவாய்,, என்னும்புராணக்கூற்றானுமுணர்க 'இதனுக்குச்சத்தியமென பொருள்கூறுவாருமுளர்.

(கழிநெடில்விருத்தம்.)

நடமாடியேழுலகுமுய்யக்கொண்ட
நாயகரோநான்மறையோர்தங்களோடுந்
திடமாடமதிட்டில்லைக்கோயில்கொண்ட
செல்வரோயுமதருமைதேராவிட்ட
ரிடமாடியிருந்தவளும் வில்க்காவிட்டா
லென்போல்வார்க்குடனிற்கவியல்வதன்று
தடமாலைமுடிசாய்த்துப்பணிந்தவானோர்
* தஞ்சுண்டாயங்கருதீநஞ்சுண்டீரோ. (எ)

(நேரிசையாசிரியப்பா.)

நஞ்சுமிழ்பகுவாய்வெஞ்சினமாசுணந்
தன்முதன்முருக்கவென்முதற்சூழ்ந்த
நீர்ச்சிறுபாம்புதன்வாய்க்கெதிர்வந்த
தேரையைவவ்வியாங்கியான்முன்
கருவிடைவந்தவொருநாட்டொடங்கி
மறவாமறலிமுறைபிறழ்பேழ்வா
யயிற்றலையன்னவெயிற்றிடைக்கிடந்தாங்
கருணனியின்றியொருவயிரேம்பற்குப்
பல்லுயிர்செகுத்துவல்லிதினருந்தி
யயர்த்தனனிருந்தும்போலும்பெயர்த்துநின்
றெண்டோள்வீசிக்கண்டோருருகத்
தொல்லெயிலுடுத்ததில்லைமூதூ
ராடுமம்பலக்கூத்தனைப்
பாடுதல்பரவுதல்பணிதலோவிலமே. (அ)

(வெண்பா.)

இலவிதழ்வாய்வீழ்வாரிகழ்வாரவர்தங்
கலவிகடைக்கணித்துங்காணே - னிலகுமொளி
யாடகஞ்சேரம்பலத்தேயாளுடையார்நின்றாடு
நாடகங்கண்டன்பானநான். (௯)

(கலித்துறை.)

நானேபிறந்துபயன்படைத்தேனயனரணனெங்
கோனேயெனத்தில்லையம்பலத்தேநின்றுகூத்துகந்த

---

* தஞ்சமெனற்பாலது - தஞ்செனக்குறைந்துநின்றது.

தேனேதிருவுள்ளமாகியென்றீமையெல்லாமறுத்துத்
தானேபுகுந்தடியேன்மனத்தேவந்துசந்திக்கவே. (௧௦)

(கழிநெடில்விருத்தம்.)

சந்துபுனையவெதும்பிமலரணைதங்கவெருவியிலங்குகலையொடு
சங்குகழலநிறைந்தவயலவர்தஞ்சொனலியமெலிந்துகிளியொடு
பந்துகழல்கண்மறந்துதளிர்புரைபண்டைநிறமுமிழந்துநிறையொடு
பண்புதவிரவனங்கனவனொடுநண்புபெருகவிளைந்தவினையன
நந்திமுழவுதழங்கமலைபெறுநங்கைமகிழவணிந்தவரவுக
ணஞ்சுபிழியமுரன்றுமுயலகனைந்துநரலவலைந்தபகிரதி
யந்திமதியொடணிந்துதிலைநகரம்பொனணியுமரங்கினடநவி [மே.
லங்கணரசையடைந்துதொழுதிவளன்றுமுதலெதிரின்றுவளையு

(நிலமண்டிலவாசிரியப்பா.)

வரையொன்றுநிறுவியரவொன்றுபிணித்துக்
கடறடவாகமிடலொடும்வாங்கித்
திண்டோளாண்டதண்டாவமரர்க்
கமிர்துணவளித்தமுதுபெருங்கடவுள்
கடையுகஞ்சென்ற காலத்துநெடுநில
மாழிப்பரப்பிலாழ்வதுபொறாஅ
தஞ்சேலென்றுசெஞ்சேலாகித்தன்
றெய்வவுதரத்துச்சிறுசெலுப்புரையிற்
பௌவமேழேபட்டதுபௌவத்தோ
டுலகுகுழைத்தொருநாளுண்டது
முலகமூன்றுமளந்துழியாங்கவ
னீரடிநிரம்பிற்றிலவேதேரி
னுரைப்போர்க்கல்லதவுன்குறைவின்றே
யினையனாகியதனிமுதல்வானவன்
கேழற்றிருவுருவாகியாழத்
தடுக்கியவேழுமெடுத்தனனெடுத்தெடுத்
தாழியூழிகீழுறக்கிளைந்துங்
காண்பதற்கரியநின்கழலும்வேண்டுபு
நிகிலலோகமுநெடுமறைத்தொகுதியு
மகிலசராசரமனைத்துமுதவிய
பொன்னிறக்கடவுளன்னமாகிக்

காண்டிலாதநின்கதிர்நெடுமுடியு
மீங்கிவைகொண்டுநீங்காதுவிரும்பிச்
சிறியபொதுவின்மறுவின்றிவிளங்கி
யேவருங்காணவாடுதியதுவெனக்
கதிசயம்விளைக்குமன்றேயதிசயம்
விளையாதுமொழிந்ததெந்தைவளையாது
கல்லினும்வலிதநுநல்லிதிற்செல்லாது
தான்சிறிதாயினுமுள்ளிடைநிரம்ப
வான்பொயச்சமாயாவாசை
மிடைந்தனகிடப்பவிடம்பெறலருமையி
லவர்கள்வர்வல்லிதிற்புகுந்து
மண்மகன்றிகிரியிலெண்மடங்குசுழற்ற
வாடுபுகிடந்தபேடினெஞ்சத்து
நுழைந்தனைபுகுந்துதழைந்தநின்சடையுஞ்
செய்யவாயுமையமர்கண்டமு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமு
மெடுத்தபாதமுந்தடுத்தசெங்கையும்
புள்ளியாடையுமொள்ளிதின்விளங்க
நாடகமாடுதிநம்பகூடும்
வேதநான்கும்விழுப்பெருமுனிவரு
மாதிநின்றிறமாதலின்மொழிவது
பெரியதிற்பெரியையென்றுமன்றே
சிறியதிற்சிறியையென்றுமன்றே
நிறைபொருண்மறைகளுணன்குநின்னறைகழ
லிரண்டொடுமறிவினிலார்த்துவைத்த
மறையவர்தில்லைமன்றுள்கிழவோனே. (கஉ)

(வெண்பா.)

கிழவருமாய்நோய்மூப்புக்கீழ்ப்பட்டுக்காமத்
துழவரும்போயோயுமாகண்டோ - மொழிதெரிய
வாயினுலிப்போதேமன்றினடமாடு
நாயனுறொன்றுளைப்போநாம். (கரு)

(கலித்துறை.)

நாமத்தினுலென் றனுத்திருத்தேனறைமாமலர்சேர்
தாமத்தினுலுன்சரண்பணியேன்சார்வதென்கொடுநான்

வாமத்திலேயொருமானைத்தரித்தொருமானைவைத்தாய்
சேமத்தினுனுன்றிருத்தில்லைசேர்வதோர்செந்நெறியே. (கச)

(கழிநெடில்விருத்தம்.)

நெறிதருகுழலையறலென்பர்க ணிழலெழுமதியநுதலென்பர்க
ணிலவினும்வெளிதுநகையென்பர்கணிறம்வருகலசமுலையென்பர்
ளறிகுவதரிதிவிடையென்பர்க ளடியிணைகமலமலரொன்பர்க [க
ளவயவமிணையமடமங்கைய ரழகியரமையுமவரொன்செய
மறிமழுவுடையகரனென்கிலர் மறலியையுமுனியுமரனென்கிலர்
மதிபொதிசடிலதரனென்கிலர் மலைமகண்மருவுபுயனென்கிலர்
செறிபொழிலிலவுதில்லையென்கிலர் திருநடநவிலுமிறையென்கிலர்
சிவகதியருளுமரசென்கிலர் சிலர்நரகுறுவரறிவின்றியே. (கரு)

(நேரிசையாசிரியப்பா.)

அறிவிலொழுக்கமும் பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையு மிடும்பையீட்டமு
மினையனபலசரக்கேற்றிவினையெனுந்
தொன்மீகாமனுய்ப்பவந்நிலைக்
கருவெனுநெடுநகரொருதுறைநீத்தத்துப்
புலனெனுங்கோண்மீனலமந்துதொடரப்
பிறப்பெனும் பெருங்கடலுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திரையுவட்டிற்பெயர்ப்பிட மயர்த்துக்
குடும்பமென்னுநெடுங்கல்வீழ்த்து
நிறையெனுங்கூம்பு முரிந்துகுறையா
வுணர்வெனுநெடும்பாய் கீறிப்புணரு
மாயப்பெயர்ப்படுகாயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழாமுன்னமலங்கன்
மதியுடனணிந்தபொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்ததெய்வநாயக
தொல்லெயிலுடுத்ததில்லைகாவல
வம்பலர்தும்பையம்பலவாணநின்
னருளெனுநலத்தார்பூட்டித்
திருவடிநெடுங்கரைசேர்த்துமா செய்யே. (கசா)

(வெண்பா.)

செய்யதிருமேனிச்சிற்றம்பலவருக்கென்
னையல்வளைகொடுத்தல்சாலுமே - யையன்றோர்

சேயேவருமளவிற் சிந்தாதமாத்திரமே
தாயேநமதுகையிற்சங்கு. (கஎ)

(கலித்துறை.)

சங்கிடத்தானிடத் தான்றனதாகச் சமைந்தொருத்தி
யங்கிடத்தாடில்லையம்பலக்கூத்தற்கவிர்சடைமேற்
கொங்கிடத்தார்மலர்க்கொன்றையென்றுயெங்கைநீயுமொரு
பங்கிடத்தான்வல்லையேலில்லையேழுன்பசப்பொழியே. (கஅ)

(கழிநெடில்விருத்தம்.)

ஒழிந்ததெங்களூற வென்கொலோவெரியிலொன்னலார்கள் புரமுன்னொர்நாள், விழுந்தெரிந்துதுகளாகவென்றிசெய்த வில்லிதில்லைநகர்போலியார், சுழிந்தவுந்தியி லழுந்திமேகலை தொடக்கநின்றவர்நடக்கநோக், தழிந்தசிந்தையினும் வந்ததாகிலுமொர்சிந்தையாயொழிவதல்லவே. (கக)

(நேரிசையாசிரியப்பா.)

அல்லல்வாழ்க்கை வல்லிதிற்செலுத்தற்குக்
கைத்தேருழந்துகார்வருமென்று
வித்துவிதைத்தும் விண்பார்த்திருந்துங்
கிளையுடன்றவிரப்பொருளுடன்கொண்டு
முளைமுதிர்பருவத்துப் பதியெனவழங்கியு
மருளாவயவரம்பிடைநடந்து
மிருளுறுபவ்வத்தெந்திரங்கடாஅய்த்
துன்றுதிரைப்பரப்பிற்குன்றுபார்த்தியங்கியு
மாற்றல்வேந்தற்குச்சோற்றுக்கடன்பூண்டுந்
தாளுழந்தோடியும் வாளுழந்துண்டு
மறியாவொருவனைச்செறிவந்துதெருட்டியுஞ்
சொற்பலபுனைந்துங்கற்றனகழறியுங்
குடும்பப்பாச நெடுந்தொடர்ப் பூட்டி
யைவரைந்திடத்தீர்ப்பநொய்திற்
பிறந்தாங்கிறந்து மிறந்தாங்குபிறந்துங்
கணத்திடைத்தோன்றிக் கணத்திடைக்கரக்குங்
கொப்புட்செய்கையொப்பின்மின்போ
லுலப்பில்யோனிக்கலக்கத்துமயங்கியு
நெய்யெரிவுளர்த்துப்பெய்முகில்பெயறருந்

தெய்வவேதியர்தில்லைமூதூ
ராடகப்பொதுவினாடகநவிற்றுங்
கடவுட்கண்ணுதனடமுயன்றெடுத்த
பாதப்போதும்பாய்புலிப்பட்டு
மீதியாத்தசைத்தவெள்ளெயிற்றரவுஞ்
சேயுயரகலத் தாயிரங்குடுமி
மணிகிடந் திமைக்குமொருபேராரமு
மருள்பொதிந்தலர்ந்ததிருவாய்மலரு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமுங்
கங்கைவழங்குந்திங்கள்வேணியுங்
கண்ணிடைப்பொறித்து மனத்திடையழுத்தியாங்
குண்மகிழ்ந்துறைக்கவுறுதவஞ்செய்தன
ஞான்முகன்பதத்தின் மேனிகழ்பதந்தா
னுறுதற்கரியதுமுண்டோ
பெறுதற்கரியதோர் பேறுபெற்றேற்கே. (உ0)

(வெண்பா.)

பெற்றோர்பிடிக்கப்பிழைத்துச்செவிலியர்கள்
சுற்றோடவோடித்தொழாநிற்கு—மொற்றைக்கைம்
மாமறுகச்சீறியசிற்றம்பலத்தான்மான்றேர்போங்
கோமறுகிற்பேதைக்குழாம். (உக)

(கலித்துறை.)

பேதையெங்கேயினித்தேறியுய்வாள்பிரமன்றனக்குத்
தாதைதன்றாதையென்றேத்தும்பிரான்றண் புலிசைப்பிரான்
* கோதையந்தாமத்தன்கொன்றைகொடானின்றுகொல்லவெண்ணி
யூதையுங்காருந்துளியொடுங்கூடியுலாவியவே. (உஉ)

(கழிநெடில்விருத்தம்.)

உலவுசலதிவாழ்விடமமரர்தொழவுணவென
வுகருமொருவருழியினிறுதி யொருவராழிய
புலவுகமழ் ○ கரோடிகையுடையபுனிதர்பூசுரர்
புலிசையலர்செய்போதணி பொழிலினிழலின்வாழ்வதோர்
கலவமயிலனார்சுருள்கரியகுழலினார்குயில்
கருதுமொழியினார்கடைநெடியவிழியினாரித
ழிலவிலழகியாரிடைகொடியின்வடிவினார்வடி
வெழுதுமருமையாரொன திதயமுழுதுமாள்வரே. (உங)

* கோதையந்தாமத்தண் கொன்றையென்பதூஉம்பாடம்.
○ கரோடிகை-எ-து-தலைமாலை.

(இணைக்குறளாசிரியப்பா.)

ஆளெனப்புகுதின்வந்தடைந்திலமத்தநின்
ருளினேவறலையினியற்றி
வழிவழிவந்தமரபினமொழிவது
னைந்தெழுத்தவையெஞ்சிந்தையிற்கிடத்தி
நனவேபோலநாடொறும்பழகிக்
கனவிலுநவிற்றுங் காதலேம்விணைகெடக்
கேட்பதுநின்பெருங்கீர்த்திமீட்பது
நின்னெறியல்லாப் புன்னெறிபடர்ந்த
மதியினெஞ்சத்தை வரைந்துநிதியென
வருத்திசெய்திடுவ துருத்திரசாதனங்
காலையுமாலையுங்கால்பெயர்த்திடுவதுன்
றலையம்வலம்வருதற்கேசால்பினிற்
கைகொடுசெயிற் றுவதையநின்னது
கோயிற்பல்பணி குறித்தேயோயா
தருகுநின்னினைந் தருவிசோரக்
கண்ணிற்காண்பதெவ் வுலகினுங்காண்பன
வெல்லா
நீயேயாகிநின்றதோர்நிலையே
நாயேன்
றலைகொடுசார்வதுன்சரண்வழியல்லா
லலைகடல்பிறழினுமடாதேயதனாற்
பொய்த்தவவேடர்கைத்தகப்படுத்தற்கு
வஞ்சச்சொல்லின்வார்வலைபோக்கிச்
சமயப்படுகுழிசமைத்தாங்கமைவயின்
மானிடமாக்களைவலியப்புகுத்து
மாறுவிரதத்தகப்படுத்தாழ்த்து
வளைவுணர்வெனக்குவருமோவுளர்தரு
நுரையுந்திரையு * நொப்புறுகொட்பும்
வரையில்சீகர வாரியுந்துரைகடற்
பெருத்துஞ்சிறுத்தும் பிறங்குவதோன்றி
யெண்ணிலவாகி யிருங்கடலடங்குந்
தன்மைபோலச்சராசரமனைத்து
நின்னிடைத்தோன்றி நின்னிடையடங்குநீ

* நொப்பு - என் - தடை.

யொன்றினுந்தோன்றாயொன்றினுமடங்காய்
வானோர்க்கரியாய்மறைகளுக்கெட்டாய்
நான்மறையாளர் நடுவுள்புக்கடங்கிச்
செம்பொற்றில்லைமூதூ
ரம்பலத்தாடு மும்பர்நாயகனே. (உ௪)

(வெண்பா.)

நாயனையவென்னைப்பொருட்படுத்திநன் களித்துத்
தாயனையனுயருளுந்தம்பிரான்—றூயவிரை
மென்றுழாய்மாலொடயன்றேடவியன் றில்லை
மன்றுளேயாடுமணி. (உ௫)

(கலித்துறை.)

மணிவாய்முகிழ்ப்பத்திருமுகம்வேர்ப்பவம்மன்றுக்கெல்லா
மணியாயருணடமாடும்பிரானையடைந்துருகிப்
பணியாய்புலன்வழிபோநெஞ்சமேயினிப்பையப்பையப்
பிணியாய்க்கடைவழிசாதியெல்லோரும்பிணமென்னவே. (உ௬)

(கழிநெடில்விருத்தம்.)

என்னுமினிமடவரலாய்செய்குவ தினமாய்வண்டுகண்மலர்கிண்டித், தென்னவெனமுரல்பொழில்சூழ்தில்லையுளரனார்திருமுடியணிதாமந், தன்னாலல்லதுதீராதென்னிடர்தகையாதுயிர்கருமுகிலேறி, மின்னுநின்றதுதுளிவாடையும்வர வீசாநின்றதுபேசாயே.(உ௭)

(இணைக்குறளாசிரியப்பா.)

பேசுவாழிபேசுவாழி
யாசையொடுமயங்கிமாசுறுமனமே
பேசுவாழிபேசுவாழி
கண்டனமறையுமுண்டனமலமாம்
பூசினமாசாம்புணர்ந்தனபிரியு
நிறைந்தனகுறையு முயர்ந்தனபணியும்
பிறந்தனவிறக்கும்பெரியனசிறுக்கு
மொன்றொன்றொருவழிநில்லாவன்றியுஞ்
செல்வமொடுபிறந்தோர் தேசொடுதிகழ்ந்தோர்
கல்வியிற்சிறந்தோர் கடுந்திறன்மிகுந்தோர்
கொடையிற்பொலிந்தோர படையிற்பயின்றோர்
குலத்தினுயர்ந்தோர் நலத்தினின்வந்தோ
ரெனையரொங்குலத்தின ரிறந்தோரனையவர்

பேருநின்றிலபோலுந்தேரி
னீயுமஃதறிதியன்றேமாயப்
பேய்த்தேர்போன்றுநீப்பருமுறக்கத்துக்
கனவேபோன்றுநனவுபெயர்பெற்ற
மாயவாழ்க்கையைமதித்துக்காயத்தைக்
கல்லினும்வலிதாக் கருதிப்பொல்லாத்
தன்மையரிழிவுசார்ந்தனைநீயு
நன்மையிற்றிரிந்த புன்மையையாதலி
னழுக்குடைப்புலன்வழி யிழுக்கத்திடைழுகி
வலைவாய்த்தூண்டிலி னுள்ளிரைவிழுங்கும்
பன்மீன்போலவு
மின்னுபுவிளக்கத்துவிட்டில்போலவு
மாசையாம்பரிசத் தியானைபோலவு
மோசையின்விளிந்த புள்ளுப்போலவும்
வீசியமணத்தின் வண்டுபோலவு
முறுவதுணராச் செறுவுழிச்சேர்ந்தனை
நுண்ணூனூற்றுத்தன்னகப்படுக்கு
மறிவில்கிடந்து நுந்துழிபோல
வாசைச்சங்கிலிப் பாசத்தொடர்ப்பட்
டிடர்கெழுமனத்தினோ டியற்றுவதறியாது
குடர்கெழுசிறையறைக் குறங்குபுகிடத்தி
கறவைநினைந்த கன்றெனவிரங்கி
மறவாமனத்து மாசறுமடியார்க்
கருள்சுரந்தளிக்கு மற்புதக்கூத்தனை
மறையவர்தில்லை மன்றுளாடு
மிறையவனென்கிலை யென்னினைந்தனையே. (௨௮)

(வெண்பா.)

நினையார்மெலியார்நிறையழியார்வாளாப்
புனைவார்க்குக்கொன்றைபொதுவோ-வனைவீரு
மெச்சியேகாணவியன்றில்லையானருளென்
பிச்சியேநாளைப்பெறும். (௨௯)

(கலித்துறை.)

பெறுகின்றவெண்ணிலிதாயரும்பேறுறும்யானுமென்னை
யுறுகின்றதுன்பங்களாயிரகோடியுமோய்வொடுஞ்சென்

றிறுகின்றநாள்களுமாகிக்கிடந்தவிடுக்கணெல்லா
மறுகின்றன தில்லையாளுடையான்செம்பொனம்பலத்தே. (௩௦)

(கழிநெடில்விருத்தம்.)

அம்பலவரங்கணரடைந்தவர்தமக்கே
யன்புடையரென்னுமிதெனுனையுரித்துக்
கம்பலமுவந்தருளுவீர்மதனன்வேவக்
கண்டருளுவீர்பெரியகாதலறியாதே
வம்பலர்நிறைந்துவசை பேசவொருமாடே
வாடையுயிரீரமணிமாமையுமிழந்தென்
கொம்பலமருந்தகமைகண்டுதகவின்றிக்
கொன்றையருளீர்கொடியிரொன்றருளுவீரோ. (௩௧)

(இணைக்குறளாசிரியப்பா.)

அருளுவாழியருளுவாழி
புரிசடைக்கடவுளருளுவாழி
தோன்றுழித்தோன்றிநிலைதவக்கறங்கும்
புற்புதச்செவ்வியின்மக்களியாக்கைக்கு
நினைப்பினுங்கடிதேயிளமைநீக்க
மதனினுங்கடிதேமூப்பின்முடர்ச்சி
யதனினுங்கடிதேகதுமெனமரணம்
* வாணாள்பருகியுடம்பைவறிதாக்கி
நாணாள்பயின்றநல்காக்கூற்ற
மினையதன்மையதிதுவேயிதனை
யெனதெனக்கருதியிதற்கென்றுதொடங்கிச்
செய்தனசிலவேசெய்வனசிலவே
செய்யாநிற்பனசிலவேயவற்றிடை
நன்றென்பசிலவேதீதென்பசிலவே
யொன்றினும்படாதனசிலவேயென்றிவை
கணத்திடைநினைந்துகளிப்பவுங்கலுழ்பவுங்
கணக்கில்கோடித்தொகுதியவைதா
மொன்றொன்றுணர்வுழிவருமோவனைத்து
மொன்றாவுணர்வுழிவருமோவென்றொன்று
தெளிவுழித்தேறல்செல்லேமெளிய
மனத்தின்செய்கைமற்றிதுவேநீயே
யரியைசாலவெம்பெருமதெரிவுறி

* வாழ்நாள் - வாணாளெனமரீஇயது.

துண்டாய்த்தோன்றுவயாவையுநீயே
கண்டனையவைநினைக்காணுவதுதா
னின்வயின்மறைத்தோயல்லையுன்னை
மாயாய்மன்னினைநீயேவாழி
மன்னியுஞ்சிறுமையிற்கரந்தோயல்லை
பெருமையிற்பெரியோய்பெயர்த்துநீயே
பெருகியுஞ்சேணிடைநின்றோயல்லை
தேர்வோர்க்குத்தம்மினுமணியைநீயே
நண்ணியுமிடையொன்றின்மறைந்தோயல்லை
யிடையிட்டுநின்னைமறைப்பதுமில்லை
மறைப்பினுமதுவு
நீயேயாகிநின்றதோர்நிலையே
அஃதான்று
நினைப்பருங்காட்சிநின்னிலையிதுவே
நினைப்புறுங்காட்சியெந்நிலையதுவே
யினிநனியிரப்பதொன்றுடையமனமருண்டு
புன்மையினினைத்துப்புலன்வழிபடரினு
நின்வயினினைந்தேமாகுதனின்வயி
னினைக்குமாநினைக்கப்பெறுதலைத்தொன்று
நீயேயருளல்வேண்டும்வேய்முதிர்
கயிலைபுல்லெனவெறிவிசும்புவறிதாக
விம்பருய்யவம்பலம்பொலியத்
திருவளர்தில்லைமூதூ
ரருநடங்குயிற்றுமாதிவானவனே. (௩௨)

(வெண்பா.)

வானோர்பணியமணியாசனத்திருக்கு
மானதசெல்வத்தரசன்றே—மானகம்
பந்திப்பார்நின்றுடும்பைம்பொன்னினம்பலத்தே
வந்திப்பார்வேண்டாதவாழ்வு. (௩௩)

(கலித்துறை.)

வாழ்வாகவுந்தங்கள்வைப்பாகவுமறையோர்வணங்க
வாள்வாய்திருத்தில்லையம்பலத்தாயுன்னையன்றியொன்றைத்
தாழ்வாரொறிவார்கடனஞ்சையுண்டிலையாகிலன்றே
மாள்வார்சிலராயன்றோதெய்வமாகவணங்குவதே. (௩௪)

(கழிநெடில்விருத்தம்.)

வணங்குமிடையீர்வறிதுவல்லியிடையாண்மேன்
மாரசரமாரிபொழியப்பெறுமனத்தோ
டிணங்கியிவடானுமெலியப்பெறுமிடர்க்கே
யூதையெரிதூவியுலவப்பெறுமடுத்தே
பிணங்கியரவோடுசடையாடநடமாடும்
பித்தனெனவும்மிதயமித்தனையுமோரீ
ரணங்குவெறியாடுமறியாடுமதுவீரு
மையலையுமல்லலையுமல்லதறியீரோ. (௩௰)

(நேரிசையாசிரியப்பா.)

ஈரவேரித்தார் வழங்குசடிலத்துக்
குதிகொள்கங்கைமதியின்மீதசைய
வண்டியங்குவரைப்பினெண்டோட்செல்வ
வொருபாற்றோடுமொருபாற்குழையு
மிருபாற்பட்ட மேனியெந்தை
யொல்லொலிப்பழனத் தில்லைமூதூ
ராடகப்பொதுவி னாடகநவிற்று
மிமையாநாட்டத் தொருபெருங்கடவுள்
வானவர்வணங்குந் தாதையானே
மதுமழைபொழியும் புதுமந்தாரத்துத்
தேனியங்கொருசிறைக்கானகத்தியற்றிய
தெய்வமண்டபத் தைவகையமளிச்
சிங்கஞ்சுமப்ப வேறிமங்கைய
ரிமையாநாட்டத் தமையாநோக்கத்
தம்மார்புபருகச் செம்மாந்திருக்கு
மானச்செல்வத்து வானோரின்ப
மதுவேயெய்தினுமெய்துககதுமெனத்
தெறுசொலாளருறுசினந்திருகி
யெற்றியுமீர்த்துங் குற்றங்கொளீஇ
யீர்ந்தும்போழ்ந்துமெற்றுபுகுடைந்தும்
வார்ந்துங்குறைத்து மதநாய்க்கீந்துஞ்
செக்குரற்பெய்துந் தீநீர்வாக்கியும்
புழுக்குடையழுவத் தழுக்கியல்சேற்றுப்
பன்னெடுங்கால மழுத்தியின்னா
வரையிறண்டத்து மாறாக்கடுந்துயர்
நிரையஞ்சேரினுஞ் சேர்கவுலாயிடை

